


துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 148-50 TM

### ஓர் வேண்டுகோள்

# ஜி. டி. நாயுடு

## கோபால் பாக், கோயமுத்தூர்

அன்புடையீர்,

எனது சிநேகிதர்களில் பலர் கட்டாயமாக வேண்டிக் கொண்டதற்கிணங்க கோயமுத்தூர்—நீலகிரி, ஈரோடு, மதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர். உடுமலைப்பேட்டை, கோயமுத்தூர் டவுன் ஆகியவற்றிற்கு நாமினேஷன் கொடுத்திருக்கிறேன்.

சென்ற சில வருஷங்களில் மோட்டார் போக்குவரத்திலும், யந்திரத் தொழில்களிலும் ஒரு சிறிது விவசாயத்திலும் அடைந்த பயனையும், மேல் படிப்புக்காக உயர்தர காலேஜ்களுக்குப் போய், அதிக வருஷங்கள் செலவு செய்து, தங்கள் பொருளையும், தேக சுகத்தையும், மன வலிமையையும் இழந்து திரும்புகிறவர்களை, எவ்விதத்தில் அதனின்றும் விடுவிக்கலாம் என்ற எண்ணத்தோடு, மிகக் குறுகிய காலத்தில் கற்கும், அதாவது சில வருஷங்களுக்கு பதில் சில வாரங்களில் கற்றுக் கொள்ளத்தக்க முறையோடு மோட்டார் இன்ஜினீரிங், ரேடியோ இன்ஜினீரிங் வியாதியை உற்பத்தி செய்யும் அணுக் கிருமி ஆராய்ச்சி (Bacteriology) முதலியவைகளை கற்பித்து அடைந்த அனுபவத்தையும், பொதுமக்களின் வாக்குகளினால் தேர்தலில் வெற்றி பெறுவேனாயின், இந்த அனுபவத்தை புற்றீசல்போல வேலையில்லாமல் திண்டாடும் இளைஞர்கள் அநேகம் பேருக்கு உபயோகப் படுத்தலாம் என்ற எண்ணத்தோடு இதில் இறங்கி யிருக்கிறேன் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சென்ற எலக்ஷனில் ஒவ்வொரு கட்சிக்காரரும் ஒவ்வொரு கட்சியும் கொடுத்த உறுதி மொழிகளில் எவ்வளவு தூரம் அனுபவத்திற்குக் கொண்டு வந்தார்கள் என்பதும் அவற்றைவிட வேறு என்னென்ன இதுவரை அனுபவித்து வருகிறோம் என்பதும் உங்களுக்குத் தெரிந்த விஷயம்! இதுவரை நீங்கள் அடைந்த அனுபவத்தால் இப்போது உங்களுடைய பொறுப்பு மிகவும் அதிகமாய் விட்டது. இந்த தருணத்தில் ஒழுக்கத்தில் உயர்ந்தவரும், ஏதாவது நன்மை செய்ய வேண்டுமென்ற பிடிவாதத்தை உடையவரும், பொதுநலத்தில் ஊக்கம் தளராதவரும், ஆன ஒருவரை வாக்காளர்களே சேர்ந்து தேர்ந்தெடுக்க வேண்டிய பொறுப்புடையவர்களாயிருக்கிறார்கள்.

இப்போது நான் எந்தவிதமான உறுதிமொழிகளையும் கொடுக்க முன்வரவில்லை. ஆனால் பொதுநலத்திற்காக ஏதாவது ஒன்று செய்ய வாய்ப்பு கிடைக்குமானால் அதைத் தவறவிட மாட்டேன். இப்போது எனக்கிருக்கும் இங்கு சொல்ல இடங்கொள்ளாத சில சந்தர்ப்பங்களால் நான் ஒவ்வொரு ஊருக்கும் வந்து, மேடைகளில் பேசவோ அல்லது வாக்காளர்களை பார்க்கவோ முடியாத நிலையில் இருக்க வேண்டியவனாய் இருக்கிறேன்.

கொஞ்ச காலமாக நான் ஏதாவது சந்தர்ப்பங்களில் பேசும் பக்ஷத்தில், அந்த பேச்சுக்களில் ஏதாவது ஒரு பாகத்தையோ அல்லது ஒரு வாக்கியத்தையோ அரைகுறையாகவோ அல்லது மாறுபாடாகவோ எடுத்துச் சொல்லியோ அல்லது விளம்பரப்படுத்தியோ விடுகிறார்கள். உதாரணமாக, நாமினேஷனை நான் தாக்கல் செய்திருப்பதை ஹிந்து (Hindu), மெயில் (Mail), பத்திரிகைகளில் கூட "ஜி. டி. நாயுடு காங்கிரசை எதிர்க்கிறார்" என்று கொட்டை எழுத்தில் தலைப்பு கொடுத்திருக்கிறது. இதைப் பார்க்கும் போது, அந்த மாகாணத்தில் ஆயிரக்கணக்கான நாமினேஷன் கொடுத்திருக்கும் அந்த நல அபேக்ஷகர்களும் காங்கிரசுக்கு ஒத்துழைக்கிறவர்களா! நான் ஒருவன் மட்டும்தான் காங்கிரசை எதிர்க்கிறேனு! நான் எந்தக் கட்சியிலும் சேரவில்லை. ஆனால் எந்தக் கட்சியிலும் இருக்கும் நல்ல கொள்கைகளையும் அதிலுள்ள நேர்மையானவர்களையும், எப்பொழுதும் அனுசரித்திருக்கிறேன்.

மேலே சொன்னபடி ஒவ்வொரு இடத்திற்கும் போய் கூட்டங்களிலும் மற்ற இடங்களிலும் பேசுவதால் உண்டாகும் மாறுபாடுகளையும் மனக்கசப்புகளையும் தவிர்க்க விரும்புகிறேன்.

ஆகையால் நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் மதிப்புடைய ஓட்டுகளை எனக்கு கொடுத்து, அதனால் நமது தேசத்துக்கு என்னால் முடியுமான நன்மை செய்யும்படி செய்வீர்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

எந்த இடங்களில் தகுந்த நல்ல அபேக்ஷகர்கள் நிற்கிறார்களோ அந்த இடங்களில் நான் விலகிக் கொள்கிறேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

கோயமுத்தூர்,<br>21—11—51

இங்ஙனம்,<br>G. D. NAIDU

ADVT.

கல்கி



# பொருளடக்கம்

மலர் 11
இதழ் 18

1951 டிசம்பர் 2

கர ௵
கார்த்திகை 16



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கல்யாண வைபவங்களுக்கும்
கடவுள் வழிபாட்டிற்கும்
இனியமணம் கமழும்

31
301
3001

ஜவ்வாது பத்திகள்

நகரங்கள்தோறும் டிபாஸிட் கட்டக்கூடிய ஸ்டாக்கிஸ்டுகள் தேவை

மதராஸ் கிளை :
228/10, கோவிந்தப்ப நாயக்கன் தெரு.

S.V. முருகேசன் அன் பிரதர்ஸ்
மதுரை * மதராஸ் * பெங்களூர் ஸிடி *

சென்னையில் எல்லா டி. யு. ஸி. எஸ். பிராஞ்சுகளிலும் கிடைக்கும்

திரையிடத்தயார்..



அஸோஸியேடட் ப்ரொடக்ஷன்ஸாரின்

# அம்மா

தமிழ்

**லலிதா...பி.எஸ்.ஸரோஜா...சாந்தகுமாரி**

திக்குரிசி...எம்.என்.நம்பியார்...துரைராஜ்...டி.பாலசுப்பிரமண்யம்

ஸ்டுடியோ.... வாஹினி · · · டைரக்ஷன்.... கே. வேம்பு

அஸோஸியேடட் ப்ரோடக்ஷன்ஸ் 11, கோபாலகிருஷ்ண ரோட், தி. நகர், மதராஸ்-17



கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 18

# கட்சியோ கட்சி!

தலைக் குடுமி அவிழ்ந்து பறக்க, அங்கவஸ்திரம் நெகிழ்ந்து பறக்க, மூக்குக் கண்ணாடி ஒரு காதிலிருந்து பெயர்ந்து தொங்க, நழுவிய இடுப்புத் துணியை ஒரு கையால் தூக்கிப் பிடித்துக் கொண்டு, மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க, வியர்க்க விருவிருக்க, ஒரு தடபுடலான மனுஷர் அவசர அவசரமாக ஸ்ரீ பொதுஜனம் அவர்களிடம் வந்து சேர்ந்தார்.

"ஐயா, பொதுஜனம் அவர்களே! வரப் போகும் அஜகஜாந்திரமான பொதுத் தேர்தலில் தங்களுடைய திவ்யமான திருவாக்கை அடியேன் அபேட்சிக்கிறேன்!" என்றார்.

"நீர் எந்தக் கட்சி, ஐயா?" என்று பொதுஜனம் கேட்டார்.

"இது என்ன இப்படிக் கேட்கிறீர்களே? என்னுடைய கட்சியையும் என்னையும் தெரியாதவர்கள் இந்த ஈரேழு பதினாலு உலகத்திலும் உண்டா? நேற்றுக்கூடப் பத்திரிகைகளில் 'அவுட்' ஆகியிருந்ததே? 'சகல புவன உத்தாரண திடீர் மோட்சக் கட்சி'தான் என்னுடைய கட்சி" என்றார்.

"ஓஹோ! அப்படியா? பெயரைக் கேட்கும் போதே மூச்சுத் திணறி ரேழியில் தூக்கிப் போடலாம் போலிருக்கிறதே? கட்சி எப்போது ஏற்பட்டது?"

"மூந்தா நாள் இராத்திரி அர்த்த ஜாம நேரத்தில் கோட்டான் கத்தும் வேளையில் ஸ்தாபித்தேன். ஆகவே, கட்சி ஏற்பட்டு, பத்து ஜாமம், எழுபத்தைந்து நாழிகை, ஆயிரத் தெண்ணூறு நிமிஷத்துக்கு மேல் ஆகிவிட்டது......"

"தங்கள் கட்சியில் இப்போது எத்தனை அங்கத்தினர் இருக்கிறார்கள்?"

"நான் ஒருவன்தான் இப்போது அங்கத்தினன். என்னுடைய பாரியாளை நல்ல நாள் பார்த்து அங்கத்தினளாய்ச் சேர்க்கலாம் என்று பார்க்கிறேன்."

"தங்கள் கட்சியின் சார்பாக மொத்தம் எத்தனை அபேட்சகர்களைத் தேர்தலுக்கு நிறுத்தியிருக்கிறீர்கள்?"

"ஏழு அபேட்சகர்களை நிறுத்தியிருக்கிறோம்!"

"யார் யார்?"

"நான் ஐந்து தொகுதிகளிலும், என் மனையாள் இரண்டு தொகுதிகளிலும் அபேட்சகர்களாக நிற்கிறோம்."

"அடே அப்பா! பிரமாதமாயிருக்கிறதே! தங்கள் கட்சி தேர்தலில் வெற்றி பெற்றால் என்ன செய்வதாக உத்தேசம்?"

"அதைத்தான் கட்சியின் பெயரிலேயே குறிப்பிட்டிருக்கிறோமே? எல்லாருக்கும் ஒரேயடியாகத் திடீர் மோட்சம் கொடுத்து விடுவோம்!"

"எல்லாருக்கும் எப்படித் திடீர் மோட்சம் கொடுப்பீர்கள்?"

"அது எங்கள் கட்சி இரகசியம். அதைப் பின்னால் வெளியிடுவோம்."

"ரொம்ப சந்தோஷம்; எனக்கு இப்போது திடீர் மோட்சம் அடைவதாக உத்தேசம் இல்லை. இன்னும் சில காலம் இந்தப் பூமியில் உயிரோடிருந்து கஷ்டப் படுவதற்கு விருப்பம். ஆகையால் மோட்சம் முழுவதையும் தாங்களே வைத்துக் கொண்டு அநுபவிக்கலாம்."

இதைக் கேட்ட திடீர் மோட்சக் கட்சித் தலைவர் மிக வெகுண்டு, "இந்தப் பொதுஜனத்துக்குப் புத்தியே வரப் போவதில்லை. காங்கிரஸ்காரர்களே மறுபடியும் தேர்தலில் ஜயித்து வந்து பொதுஜனத்தை நன்றாய்க் கஷ்டப்படுத்தட்டும்!" என்று சாபங் கொடுத்து விட்டுப் போனார்.

அடுத்தாற்போல், இன்னொருவர் வந்தார். அவர் தலையில் ஒவ்வொரு ரோமமும் ஒரு ஈட்டியைப் போல் குத்திட்டு நின்றது. தாடி மீசைகள் பரவலாகவும் பயங்கரமாகவும் இருந்தன. கண்கள் கொள்ளிக் கட்டையைப் போல் சிவந்து பிரகாசித்தன.

"ஒழிக ஒழிக! பணக்காரன் ஒழிக! ஏழை ஒழிக! முதலாளி ஒழிக! தொழிலாளி ஒழிக! நீர் ஒழிக! நான் ஒழிக! தோழர் பொதுஜனம்! உமது வோட்டை எனக்கே கொடுக்க வேண்டும். கொடுப்பீரா! மாட்டீரா! கொடுக்காவிட்டால் உம்மை விடப் போவதில்லை. உம்முடைய கையிலிருந்து வோட்டைப் பிடுங்கிச் சரி சமமாகப் பங்கு போட்டுக் கொடுத்து விடுவோம்."

"அட கடவுளே!......"

"ஆ! நிறுத்தும்! அந்தப் பயங்கரமான பெயரைச் சொல்ல வேண்டாம்!"

"போறும், ஐயா! எனக்கு என்று வோட்டு ஒன்றுதான் இப்போது இருக்கிறது. அதையும் பிடுங்கிப் பங்கு போட்டு விடுவதாகப் பயமுறுத்துகிறீரே! 'உங்கள் கட்சி ஜயித்தால் இன்னும் என்னென்ன செய்வீர்கள்!"

"ஆறு அவுன்ஸ் அரிசி ரேஷனை ஒழிப்போம்."

"அதையும் ஒழித்து விடுவீர்களா! அப்புறம்!"

"எல்லோருக்கும் இருபத்து நாலு அவுன்ஸ் கொடுப்போம்!"

"ஒரு காலைக்கா! மாதத்துக்கா!"

"தவணை ஒன்றும் கிடையாது. மறுபடி கிடைக்கும் வரையில் வைத்துக் கொள்ள வேண்டும்."

"அந்த இருபத்து நாலு அவுன்ஸைத்தான் எப்படிச் சம்பாதித்துக் கொடுப்பீர்!"

"அதிகமாய் வைத்திருப்பவர்களிடமிருந்து பிடுங்கிக் கொடுப்போம்."

"பிடுங்குவதற்கு ஒருவரிடமும் அதிகம் இல்லாவிட்டால் என்ன செய்வீர்!"

"பாரதியார் சொன்னபடி 'தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அழித்திடுவோம்'".

"எப்படி அழிப்பீர்!"

"ஒரு கறுப்புப் பலகையில் 'ஜகம்' என்று வெள்ளைச் சாக்கட்டியினால் எழுதுவோம். உடனே அதை அழித்து விடுவோம்."

"ஜகத்தை அப்படி அழித்து விடுவதில் எனக்கு இஷ்டம் இல்லை. போய் வாருங்கள்!"

மூன்றாவதாக இன்னொருவர் ஸ்ரீ பொதுஜனத்தின் வோட்டை அபேட்சித்து வந்து சேர்ந்தார்.

"நீங்கள் எந்தக் கட்சி!" என்று பொதுஜனம் கேட்டார்.

"என்ன ஐயா, தெரியாததுபோல் கேட்கிறீரே! எங்கள் கட்சியின் பெயர் சென்ற இரண்டு மாதத்துக்கு மேலாகப் பத்திரிகைகளில் ஓயாமல் அடிபட்டு வருகிறதே! நூறு வருஷத்தில் பட வேண்டிய அடிகளை யெல்லாம் இரண்டு மாதத்தில் பட்டு விட்டதே! தினம் தினம் எத்தனை பேர் எங்கள் கட்சிக்கு வருகிறார்கள்! எத்தனை பேர் திரும்பிப் போகிறார்கள்!......"

"ஓகோ! தாங்கள் கஷக் உஷக் படார் கட்சியைச் சேர்ந்தவரா!"

"ஆமாம்; எங்கள் கட்சியின் பெயரை என்னை விட நீங்கள் நன்றாய்ச் சொல்கிறீர்களே! ஆகையால் உங்கள் வோட்டையும் எங்களுக்குத்தான் கொடுக்க வேண்டும்."

"உங்களைத் தேர்ந்தெடுத்தால் என்ன செய்யப் போகிறீர்கள்!"

"காங்கிரஸ்காரர்களை விரட்டியடித்து விட்டு நாங்கள் மந்திரிகளாவோம்."

"காங்கிரஸ் மீது ஏன் அவ்வளவு கோபம்!"

"காங்கிரஸ்தான் நம்முடைய கஷ்டங்களுக்கெல்லாம் காரணம். காங்கிரஸினால்தான் எனக்கு மந்திரி வேலை கிடைக்கவில்லை. காங்கிரஸினால் தான் ஊரில் பஞ்சம் தலைவிரித்தாடுகிறது. காங்கிரஸுக்கு நோய் கண்டு புரை ஓடி விட்டது. காங்கிரஸ் சாகப் போகிறது நிச்சயம். காங்கிரஸைக் குழி தோண்டிப் புதைத்து விட்டு மறு காரியம் பார்ப்போம்."

"காங்கிரஸ்தான் சாகப் போகிறதே! நீங்கள் எதற்காகக் குழி தோண்ட வேண்டும்!"

---

## சென்ற வாரம் நிகழ்ந்தது!

சென்ற வாரம் சென்னை நகரின் வீதிகளில் ஆங்கிலத்தில் "எங்கள் கட்சிக்கு வோட்டுப் போடுங்கள்" என்று கூவிக்கொண்டு சைக்கிள் ஊர்வலம் சென்றார்கள். அதைக் கேட்டுச் சில பெண்மணிகள் பேசிக் கொண்டது நமது சித்திரக்காரர் காதில் விழுந்தது!

"நாங்களும் நிற்கிறோமே?"




ஸ்ரீ ஜவாஹர்லால்நேரு சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது இந்தியாவில் முதல் முதல் ஸ்தாபிக்கப் பட்ட சென்னை மியூஸியத்தின் நூறாவது ஆண்டு விழாவுக்குத் தலைமை வகித்து நடத்தி வைத்தார்.

---

"நேற்று வரையில் காங்கிரஸில் இருந்தோமே என்ற அபிமானத்தினால்தான். பெரிய குழியாகத் தோண்டிப் புதைத்துச் சமாதி கட்டி விடுவோம். சமாதியின் பேரில் ஜவாஹர்லால் நேருவின் சிலையைப் பிரதிஷ்டை செய்வோம்!"

"பலே பலே! காங்கிரஸுக்குச் செய்வது இருக்கட்டும்; மக்களுக்கு என்ன செய்வீர்கள்!"

"மக்களுக்கு என்னென்ன வேண்டுமோ அவையெல்லாம் செய்வோம்!"

"சிலவற்றைக் குறிப்பாகச் சொல்லுங்களேன்!"

"கண்ட்ரோல் வேண்டுகிறவர்களுக்குக் கண்ட்ரோல் உண்டு; கண்ட்ரோல் வேண்டாதவர்களுக்குக் கண்ட்ரோல் இல்லை; சாமான் விலை குறைக்க வேண்டுமென்பவர்களுக்குக் குறைப்போம்; கூட்ட வேண்டுமென்பவர்களுக்குக் கூட்டுவோம்; மதுவிலக்கு வேண்டு மென்றால் வேண்டும்; வேண்டா மென்றால் வேண்டியதில்லை. மாகாணப் பிரிவினையும் அப்படித்தான்!"

"சந்தோஷம்; இப்போது இங்கிருந்து கம்பி நீட்டுங்கள் என்று சொன்னால் உடனே கம்பி நீட்டுவீர்கள் அல்லவா!"

"பேஷாக நீட்டுவோம்!"

"எங்கே! கம்பி நீட்டுங்கள், பார்க்கலாம்."

கஷக் உஷக் படார் கட்சிக்காரர் கொஞ்சம் தயங்கி நின்றார். பொதுஜனத்தின் முகத் தோற்றத்தைப் பார்த்துவிட்டுச் சவாரி விட்டார்.

இப்படியாக மொத்தம் பதினேழு கட்சிகள் நம் சென்னை மாகாணத்தில் பொதுத் தேர்தலில் போட்டியிடுகின்றன. எல்லாரும் சேர்ந்து கூச்சல் போட்டுப் பொது ஜனத்துக்குத் தலைவலியை உண்டு பண்ணத் தொடங்கிவிட்டார்கள். பொது ஜனம் கொஞ்சம் தலைவலியை அநுபவித்தாலும் பாதகமில்லை; எவ்வளவோ பொறுத்துக் கொண்டிருப்பவர் இதையும் பொறுத்துக் கொள்வார்.

ஆனால் இந்தக் கூச்சல்களினால் நாம் நமது மனது குழம்பிவிட மட்டும் இடங் கொடுக்கக் கூடாது. கூச்சல் போடுகிறவர்கள் எல்லாரும் போடட்டும். காது செவிடுபடும்படி கூச்சல் போடட்டும். தலைவலியோடு காது வலியையும் சேர்த்து அநுபவிப்போம். நாம் வோட்டுப் போட வேண்டியது யாருக்கு என்பதில் மட்டும் நம் மன உறுதியை மேற்படி கூச்சல்கள் மாற்றிவிட முடியாது.

# இரண்டாவது காரணம்

வரும் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி அபேட்சகர்களுக்குத்தான் மக்கள் தங்கள் வோட்டைக் கொடுக்க வேண்டுமென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இதற்கு மூன்று முக்கியமான காரணங்கள் இருக்கின்றன. அவை வருமாறு:—

1. தலைவரின் தகுதி.
2. கட்சிகளின் யோக்யதை.
3. அபேட்சகர்களின் தராதரம்.

மேலே குறிப்பிட்டிருக்கும் மூன்று காரணங்களில் முதல் காரணத்தைப் பற்றிச் சென்ற இதழ்ல் எழுதியிருந்தோம். இந்தியா தேசத்துக்குத் தலைமை வகிப்பதற்குத் தற்சமயம் ஜவாஹர்லால்ஜியைப்போல் தகுதி வாய்ந்தவர் யாரும் இல்லை. அவருடைய தகுதியில் பத்தில் ஒரு பங்கு உள்ளவர்களும் இல்லை. ஜவாஹர்லால்ஜியை எண்ணிவிட்டு மற்றக் கட்சித் தலைவர்களை எண்ணிப் பார்த்தால் யானைக்கும் பூனைக்கும் உள்ள

வித்தியாசம் இருப்பது தெரியும். காங்கிரஸுக்கு வோட்டுக் கொடுப்பதினால் தான் ஜவாஹர்லால்ஜியின் தலைமை தேசத்துக்குக் கிடைக்கும். இந்த ஒரு காரணமே நமக்குப் போதுமானதுதான். எனினும், இரண்டாவது காரணத்தைப் பற்றி இங்கே சிறிது கவனிக்கலாம்.

இந்தியாவுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்த ஸ்தாபனம் காங்கிரஸ். நாளை நடக்கும் பொதுத் தேர்தலில் வயது வந்த மக்களுக்கெல்லாம் வோட்டுரிமை கிடைத்திருப்பது காங்கிரஸ் ஸ்தாபனத்தினால்தான். சென்ற அறுபது ஆண்டு காலத்தில் இந்தியா தேசம் அடைந்திருக்கும் ஒவ்வொரு முன்னேற்றத்துக்கும் காரணமானது காங்கிரஸ். தாதாபாய் நௌரோஜி முதல் மகாத்மா காந்தி வரையில் இந்த நாட்டின் மகத்தான தலைவர்கள் போற்றி வளர்த்த ஸ்தாபனம் காங்கிரஸ். இதையெல்லாம் நாம் மறந்துவிட முடியாது.

சமீபத்தில் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஏற்பட்டுள்ள குறைபாடுகளைப் பற்றிக் காரசாரமான சர்ச்சைகள் நடந்தன. இந்தச் சர்ச்சைகளை நடத்தியவர்களும் காங்கிரஸ் வாதிகள்தான். குறைகளைக் குறிப்பிட்டு அதிகமாக வருந்தியவர் தலைவர் ஜவாஹர்லால் நேரு. இந்த மாதிரி ஆத்ம சோதனையில் ஈடுபட்டுத் தன்னைத் தானே தூய்மைப் படுத்திக்கொள்ள ஒரு ஸ்தாபனம் பிரயத்தனம் செய்ததற்கு உலக சரித்திரத்தில் வேறு உதாரணம் சொல்ல முடியாது.

இந்த ஆத்ம சோதனை காரணமாக, காங்கிரஸில் புகுந்திருந்த குறைபாடுகள் பல களையப்பட்டிருக்கின்றன. பாக்கியுள்ள குறைகளையும் களைவதில் பொதுத் தேர்தல் முடிந்ததும் முனையப்போவதாக ஜவாஹர்லால்ஜி கூறியிருக்கிறார். ஆகையால் சிறிய குறைகளை எண்ணிக் காங்கிரஸின் மலை போன்ற மகிமையை நாம் மறக்க முடியாது.

காங்கிரஸ் ஸ்தாபனம் ஒன்றுதான் ஏறக்குறைய எல்லாத் தேர்தல் ஸ்தானங்களுக்கும் அபேட்சகர்களை நிறுத்தி வைத்திருக்கிறது. மற்றக் கட்சிகளால் அது முடியவில்லை. மொத்தத்தில் அரைவாசி ஸ்தானங்களுக்குக் கூட மற்றக் கட்சிகள் அபேட்சகர்களை நிறுத்த இயலவில்லை. இதிலிருந்தே காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பலம் வெளியாகிறது. இந்த பலம் காங்கிரஸுக்கு எப்படி ஏற்பட்டது? மக்களின் ஆதரவினால்தான் ஏற்பட்டது. மக்களின் ஆதரவினால் பலம் பெற்ற காங்கிரஸ் ஸ்தாபனம் மக்களின் நலன்களை ஒருநாளும் புறக்கணிக்க முடியாது.

மற்றக் கட்சிகள் அந்தந்தக் கட்சி நிர்வாகிகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவை.

காங்கிரஸோ பொதுஜன அபிப்பிராயத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டது.

காங்கிரஸுக்கு ஒரு வேலைத் திட்டம் இருக்கிறது. நாட்டின் சிறந்த அறிவாளிகள் சேர்ந்து காரிய சாத்தியமான ஐந்து வருஷத் திட்டத்தைத் தயாரித்து நாட்டு மக்களின் முன்னால் சமர்ப்பித்திருக்கிறார்கள். அதை நிறைவேற்றி வைத்து நாட்டின் பொருளாதார சுபிட்சத்தைப் பெருக்குவதே அடுத்த ஐந்து வருஷத்தில் காங்கிரஸ் கட்சியின் முக்கிய வேலை என்று ஜவாஹர்லால்ஜி அடிக்கடி வற்புறுத்திச் சொல்லி வருகிறார்.

மற்றக் கட்சிக்காரர்கள் ஏதேதோ ஆகாசப் பந்தல்கள் போடுகிறார்களே தவிர, இதைச் செய்வோம், இப்படிச் செய்வோம் என்று திட்டமாகச் சொல்லவில்லை. சொல்லியிருக்கிற அளவில், காரிய சாத்தியமற்ற அபத்தங்களாக இருக்கின்றன.

நாட்டில் சிற்சில வகுப்பாரின் நலத்துக்காகவும், சிற்சில கூட்டத்தாரின் வோட்டுகளைப் பெறுவதற்காகவும் மற்றக் கட்சிக்காரர்கள் திட்டம் போடுகிறார்கள். காங்கிரஸ் கட்சி ஒன்றுதான் தேசத்தின் மொத்த க்ஷேமத்துக்காகத் திட்டம் போட்டிருக்கிறது.

காங்கிரஸ் தன் வேலைத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்குச் சட்ட சம்மதமான அஹிம்சா பூர்வமான இராஜ பாட்டையை மேற்கொண்டிருக்கிறது.

மற்றக் கட்சிகள் எந்தப் பாதையைக் கைக்கொள்ளும் என்று தெளிவாகத் தெரியவில்லை. கட்சியின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக நாட்டில் கலகத்தையும் குழப்பத்தையும் விளைவிக்கவும் சில கட்சிகள் முன் வரலாமென்பது அவற்றின் நடவடிக்கைகளினால் வெளியாகிறது.

இன்னும் ஒரு பெரிய வேடிக்கை என்னவென்றால் காங்கிரஸைத் தவிர மற்றையக் கட்சிகள் தங்கள் பலவீனத்தை உணர்ந்திருக்கின்றன. சொந்தத் திட்டத்தின் பேரில் தேர்தலில் ஜயிக்கலாம் என்கிற சுய நம்பிக்கை மற்றக் கட்சிகளுக்கு இல்லை. எனவே, ஒன்றோடொன்று சேர்ந்து பலம் திரட்ட முயல்கின்றன.

பொது உடைமைக் கட்சியின் வழிகள் நமக்குப் பிடிக்காவிட்டாலும் அவற்றின் உயர்ந்த இலட்சியத்தில் நமக்கு நம்பிக்கை இருந்தது. அந்த நம்பிக்கை இப்போது சிதறிவிட்டது. திராவிடக் கழகத்துடன் கம்யூனிஸ்ட் கட்சி உறவு கொண்டாடுவதைப் போன்ற அரசியல் தமாஷ் வேறு ஏதேனும் இருக்க முடியுமா! "இந்தியா என்றும் அடிமையாயிருக்க வேண்டும்; இங்கிலீஷ்காரர்களே நம்மை என்றென்றும் ஆண்டு வர வேண்டும்" என்னும் கொள்கையுடைய கட்சியின் வாரிஸுதாரர்கள் திராவிடக் கழகத்தினர். இந்தியா சுதந்திரம் பெற்ற சுப தினத்தில் கருப்புக் கொடி போட்டுத் துக்கம் கொண்டாடியவர்கள். புதிய சமதர்ம சமுதாயத்தை நிலைநாட்டப் போவதாகச் சொல்லும் பொது உடைமைக் கட்சியார் அந்தக் கையவர்களுடன் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் என்றால், அக் கட்சியின் இலட்சியம் படுகுழியில் விழுந்து விட்டது என்று ஏற்படுகிறது.

சோஷலிஸ்டுகள் டாக்டர் அம்பேத்கரின் அநுபந்தக் கட்சியுடன் கூட்டுச் சேர்ந்திருப்பதும் அவ்வளவு வேடிக்கையான காரியந்தான். புதிய பிரஜா கட்சிக்காரர்களைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அவர்கள் யாரோடு வேண்டுமானாலும் கூட்டாகச் சேரத் தயார். ஆனால் அவர்களுடன் சேருகிறவர்களைக் கண்டு பிடிப்பது தான் கஷ்டமாயிருக்கிறது.

மற்றும் பல திடீர் ஜனன கட்சிக்காரர்கள் காங்கிரஸை எதிர்ப்பதற்காக அங்கங்கே 'ஐக்ய முன்னணி' ஏற்படுத்த முயன்று வருகிறார்கள்.

இந்தக் கட்சிகளின் கூட்டுச் சேர்க்கையைப் பார்க்கும்போது ஒன்று தெளிவாக விளங்குகிறது. காங்கிரஸை எப்படியாவது தோற்கடிப்பது ஒன்றுதான் இக்கட்சிகளின் முக்கிய நோக்கம். அதற்காக எது வேண்டுமானாலும் செய்யத் தயார். மற்றப்படி இலட்சியம், திட்டம், கொள்கை எல்லாம் வெறும் பேச்சுதான்!

இப்படியாக எந்த விதமாகப் பார்த்தாலும் தேர்தலுக்கு நிற்கும் கட்சிகளுக்குள்ளே காங்கிரஸ் கட்சிதான் பொதுமக்களின் ஆதரவுக்கு உரியது என்று ஏற்படுகிறது.

ஆகையால் இரட்டை மாட்டுச் சித்திரம் பொறித்த பெட்டியிலேதான் பொது மக்கள் தங்கள் வோட்டுக்களைப் போட வேண்டும்.

# பொன்னியின் செல்வன்




அத்தியாயம் 47

## பேய்ச் சிரிப்பு

கல்கி

இளவரசரும் பூங்குழலியும் யானை மீது ஏறிச் சென்ற பிறகு, பின் தங்கியவர்களுக்கு என்ன நேர்ந்தது என்பதை நாமும் நேயர்களுக்குச் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறோம்.

"யானைக்கு மதம் பிடித்து விட்டது!" என்று சேநாதிபதி கூச்சலிட்டதைக் கேட்டு மற்றவர்களும் அப்படியே முதலில் நம்பினார்கள். யானையைப் பின் தொடர்ந்து குதிரைகளை வேகமாக விட்டுக் கொண்டுபோகப் பார்த்தார்கள். ஆனால் அது இயலுகிற காரியமாயில்லை. 'யானை இறவு'த் துறையை அடைந்ததும் அவர்களுடைய பிரயாணம் தடைப் பட்டு விட்டது. வழக்கம்போல் எல்லாருக்கும் முதலில் சென்ற வந்தியத் தேவனுடைய குதிரை அக்கடல் துறையில் இறங்கிப் பாய்ந்து சேற்றில் அகப்பட்டுக் கொண்டது. மிக்க சிரமப் பட்டு அதை வெளியேற்றினார்கள். ஆனாலும் குதிரை இனிப் பிரயாணத்துக்குத் தகுதியில்லை யென்று ஏற்பட்டது.

சேநாதிபதி பூதிவிக்கிரமகேசரி இன்னது செய்வதென்று தெரியாமல் தலையில் தலையில் அடித்துக் கொண்டார். "என் வாழ்க்கையில் இம்மாதிரி தவறு செய்த தில்லை. எல்லாரும் சும்மா நிற்கிறீர்களே? என்ன செய்யலாம்? இளவரசரை எப்படிக் காப்பாற்றலாம்? யாருக்காவது யோசனை தோன்றினால் சொல்லுங்கள்!" என்றார். அப்போது ஆழ்வார்க்கடியான் முன்வந்து

"சேனாதிபதி! எனக்கு ஒன்று தோன்றுகிறது; சொல்லட்டுமா?" என்றான்.

"சொல்வதற்கு நல்ல வேளை பார்த்துக் கொண்டிருக்கிறாயா? சீக்கிரம் சொல்!" என்றார் சேனாதிபதி.

"இளவரசர் சென்ற யானைக்கு உண்மையில் மதம் பிடிக்கவில்லை......"

"என்ன உளறுகிறாய்? பின்னே யாருக்கு மதம் பிடித்தது? உனக்கா?"

"ஒருவருக்கும் மதம் பிடிக்கவில்லை. தாங்கள் வேண்டுமென்று பிரயாணத்தைத் தாமதப் படுத்துகிறீர்கள் என்ற சந்தேகம் இளவரசருக்கு உண்டாகி விட்டது. அதனால் நம்மை விட்டுப் பிரிந்து போவதற்காக யானையை அப்படித் தூண்டிவிட்டு வேகமாய்ப் போய் விட்டார். யானையைப் பழக்கும் வித்தையின் சகல இரகசியங்களையும் அறிந்தவர் இளவரசர் என்பதுதான் நம் எல்லாருக்கும் தெரியுமே?"

இது உண்மையாயிருக்கும் என்று சேனாதிபதிக்கும் பட்டது. அவர் உள்ளம் சிறிது நிம்மதி அடைந்தது.

"சரி; அப்படியேயிருக்கட்டும். ஆனாலும் நாம் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்துக்குப் போய்ச் சேர வேண்டும் அல்லவா? அங்கே நடப்பது என்ன என்றாவது தெரிந்து கொள்ளவேண்டும் அல்லவா?"

"போக வேண்டியதுதான். கடற்கழியின் ஓரமாகச் சென்று எங்கேயாவது படகு கிடைத்தால் அதில் ஏறிக்கொண்டு தான் கடந்தாக வேண்டும். அல்லது பார்த்திபேந்திர பல்லவரின் கப்பல் வரும் வரையில் காத்திருக்கலாம்."

"வைஷ்ணவரே! நீர் பொல்லாதவர். இளவரசரிடம் இப்படி ஏதாவது சொல்லி விட்டீர் போலிருக்கிறது."

"சேனாதிபதி! இந்தப் பிரயாணம் கிளம்பியதிலிருந்து நான் இளவரசருடன் பேசவே இல்லை."

இதன் பிறகு அவர்கள் அந்தக் கடற்கழியின் ஓரமாகக் கிழக்கு நோக்கிச் சென்றார்கள்.

சென்ற அத்தியாயத்தில் வெளியாகியிருந்த படங்களிலிருந்து நேயர்கள் இலங்கைத் தீவின் வட பகுதியின் இயல்பை ஒருவாறு அறிந்திருக்கலாம். இலங்கையின் வடக்கு மூலைப் பகுதிக்கு அந்நாளில் நாகத்வீபம் என்று பெயர் வழங்கியது. அந்தப் பகுதியையும் இலங்கையின் மற்றப் பெரும் பகுதியையும் இருபுறத்திலிருந்தும் கடல் உட்புகுந்து பிரித்தது. ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குச் செல்லும்படியாகக் கடற்கழி மிகக் குறுகியிருந்த இடத்துக்கு 'யானை இறவு'த் துறை என்று பெயர். சில சமயம் இத்துறையில் தண்ணீர் குறைவாயிருக்கும். அப்போது சுலபமாக இறங்கிக் கடந்து செல்லலாம். மற்றச் சமயங்களில் அதைக் கடப்பது எளிதன்று. படகுகளிலேதான் கடக்க வேண்டும். *

அந்தச் சமயத்தில் இலங்கைக் கடற்கரையோரமாக இருந்த படகுகள் எல்லாம் பெரும்பாலும் மாதோட்டத்துக்கும் திரிகோண மலைக்கும் சென்றிருந்தன. என்றாலும், தப்பித்தவறி எங்கேயாவது ஒன்றிரண்டு படகுகள் இருக்கலாம் என்று எண்ணிச் சேனாதிபதி முதலியவர்கள் பார்த்துக் கொண்டே சென்றார்கள். கடைசியாக மீன் பிடிக்கும் வலைஞனுடைய சிறிய படகு ஒன்று சிக்கியது. அதில் படகோட்டி ஒருவனேயிருந்தான். அவனும் முதலில் வரமாட்டேன் என்று தகராறு செய்தான். கேட்கிறவர் சோழ நாட்டுச் சேனாதிபதி என்று தெரிந்துகொண்டு சம்மதித்தான்.

படகில் ஏறிக் கடல் கால்வாயைக் கடந்தார்கள். ஆனால் பிறகு எப்படித் தொண்டை மானாற்றின் முகத்துவாரத்தை அடைவது? காட்டு வழியில் நடந்து போய்ச் சேர்வது சுலபமன்று. அதிக நேரமும் ஆகும். ஆகையால் அதே படகை உபயோகித்துக் கீழைக் கடற் கரையோரமாகவே சென்று தொண்டைமானாற்றின் சங்கமத்தை அடைவதென்று தீர்மானித்தார்கள்.

நள்ளிரவு வரையில் படகுக்காரன் கடலோரமாகப் படகு விட்டுக்கொண்டு சென்றான். அதற்குப் பிறகு அவன் களைத்து விட்டான். மற்றவர்கள் உதவி செய்வதாகச் சொல்லியும் பயனில்லை. "இனி அடிக்கடி திசை திரும்பவேண்டும். மூலை முடுக்குகளும் கற்பாறைகளும் அதிகம். பாறையில் மோதினால் படகு உடைந்து சுக்கு நூறாகிவிடும். இனிப் பொழுது விடிந்துதான் படகு செலுத்த முடியும்" என்றான். சேனாதிபதி முதலியவர்களும் களைப்படைந்து போயிருந்தார்கள். ஆகையால் கரையில் இறங்கித் தோப்பு ஒன்றில் படுத்தார்கள்.

வந்தியத்தேவனுக்கு இது ஒன்றும் பிடிக்க வில்லை. அவன் ஆழ்வார்க்கடியா

* யானை மந்தைகள் இந்த இடத்தில் கடலில் இறங்கிக் கடந்து செல்வது வழக்கமானபடியால் 'யானை இறவு' என்ற பெயர் வந்தது. முற்காலத்தில் இவ்விடத்தில் யானைகளைக் கப்பல்களில் ஏற்றி வெளி நாடுகளுக்கு அனுப்பியதாகவும் சொல்லப்படுகிறது.

னோடு சண்டை பிடித்தான். "எல்லாம் உன்னாலே வந்த வினை!" என்றான்.

"என்னால் என்ன இப்போது வந்தது?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"நீ ஒன்றையும் மனம் விட்டுச் சொல்வதில்லை. கடம்பூரிலிருந்து நானும் பார்த்துக் கொண்டுதான் வருகிறேன். கொஞ்சம் சொல்வதுபோல் சொல்கிறாய்; பாதிச் செய்தியை இரகசியமாய் வைத்துக் கொள்கிறாய். இளவரசர் யானைமேல் ஏறியதன் நோக்கம் உனக்குத் தெரிந்திருக்கிறதே? அதை என்னிடம் முன்னமே சொல்லியிருந்தால் நானும் அந்த யானையின்மேல் ஏறியிருப்பேன் அல்லவா? இவ்வளவு கஷ்டப்பட்டுத் தேடிப் பிடித்த இளவரசரை இப்போது கைநழுவ விட்டுவிட்டோமே? பழையாறைக்குப் போய் இளையபிராட்டியிடம் என்ன சொல்வது?" என்றான் வந்தியத்தேவன்.

"ஓலையைக் கொடுத்ததும் உன் கடமை தீர்ந்து விட்டது. இன்னும் என்ன?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அதுதான் இல்லை. இளவரசரை இளையபிராட்டியிடம் கொண்டு போய்ச் சேர்த்த






பிறகுதான் என்னுடைய கடமை தீர்ந்ததாகும். நீயே அதற்குக் குறுக்கே நிற்பாய்போலிருக்கிறதே!"

"இல்லை, அப்பா, இல்லை! நான் குறுக்கே நிற்கவில்லை. நாளைக்கே நான் சேநாதிபதியிடம் விடைபெற்றுக் கொண்டு என் வழியே போகிறேன்."

"உன் காரியம் முடிந்து விட்டது, இளவரசரைப் பிடித்துக் கொடுத்தாகி விட்டது என்று போகப் பார்க்கிறாயாக்கும். உன்பேரில் எனக்கு எப்போதுமே கொஞ்சம் சந்தேகமிருந்தது. இப்போது அது உறுதியாகிறது."

இவ்விதம் அவர்கள் சிறிது நேரம் சண்டை பிடித்துக் கொண்டிருந்த பிறகு தூங்கிப் போனார்கள். நன்றாகக் களைத்திருந்தபடியால் அடித்துப் போட்டவர்களைப் போல் தூங்கினார்கள்.

பலபலவென்று பொழுது விடியும் சமயத்தில் படகு வலிக்கும் சத்தம் கேட்டு ஆழ்வார்க்கடியான் முதலில் விழித்துக் கொண்டான். அவன் எதிரே தோன்றிய காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது. கடலில் கொஞ்ச தூரத்துக்கப்பால் பாய்மரம் விரித்த மரக்கலம் ஒன்று நின்று கொண்டிருந்தது. அது பயணப் படுவதற்கு ஆயத்தமாக நின்றதாக நன்கு தெரிந்தது. அந்த மரக்கலத்தை நோக்கிக் கரையிலிருந்து ஒரு படகு போய்க் கொண்டிருந்தது. அதில் படகுக்காரனைத் தவிர மூன்று பேர் இருந்தார்கள். அந்தப் படகு முதல் நாள் மாலை தங்களை ஏற்றி வந்த படகுதான் என்று தெரிந்து கொள்ள ஆழ்வார்க்கடியானுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

அந்த மரக்கலம் எங்கிருந்து திடீரென்று கிளம்பிற்று என்பதையும் அவன் விரைவிலே ஊகித்துக் கொண்டான். அவர்கள் படுத்திருந்த இடத்துக்குப் பக்கத்தில் கடல் பூமிக்குள் குடைந்து சென்றிருந்தது. மரங்கள் அந்த இடத்தை ஓரளவு மறைத்திருந்தன. அந்தக் குடாவிலேதான் அம் மரக்கலம் நின்றிருக்க வேண்டும். பொழுது விடிந்ததும் புறப்பட்டிருக்க வேண்டும்.



அந்த மரக்கலம் யாருடையது? எங்கிருந்து வந்தது? எங்கே போவது? படகு எதற்காகக் கப்பலை நோக்கிப் போகிறது? அதில் இருப்பவர்கள் யார்?

இவ்வளவு கேள்விகளும் ஆழ்வார்க்கடியானுடைய மனதில் மின்னலைப் போல் தோன்றி மறைந்தன.

"சேநாபதி! சேநாபதி! எழுந்திருங்கள்!" என்று கூவினான்.

சேநாதிபதியும் வந்தியத்தேவனும் மற்ற இரு வீரர்களும் திடுக்கிட்டு விழித்தெழுந்தார்கள்.

முதலில் கடலில் நின்ற பாய்மரக் கப்பல் அவர்கள் கண்ணில் தென்பட்டது.

சேநாதிபதி, "ஓ! அது சோழநாட்டுக் கப்பல்தான்! பழுவேட்டரையர்கள் அனுப்பிய கப்பலாகவே இருக்கலாம்! இளவரசர் ஒரு வேளை அதில் போகிறாரோ, என்னமோ? ஐயோ! தூங்கிப் போய் விட்டோமே! என்ன பிசகு செய்தோம்!" என்றார்.

பிறகு, "படகு எங்கே? போய்க் கப்பலைப் பிடிக்க முடியுமா என்று பார்க்கலாம்!" என்றார்.

அதற்குள் படகு சென்று கொண்டிருப்பதும் அவர் கண்ணில் படவே, "அடடே! அதோ போகிறது நாம் வந்த படகல்லவா? அதில் ஏறிப் போகிறவர்கள் யார்? அடே படகுக்காரா! நில் நில்!" என்று இரைந்தார்.

படகுக்காரனின் காதில் அது விழுந்ததோ என்னமோ தெரியாது. அவன் படகை நிறுத்தவில்லை. மேலே செலுத்திக் கொண்டு போனான்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டும் கேட்டுக் கொண்டுமிருந்தான் வந்தியத்தேவன். "அந்தக் கப்பலில் இளவரசர் போகிறார்!" என்று சேநாதிபதி கூறியது அவன் செவி வழியாகப் புகுந்து மனதில் பதிந்தது. அதற்குப் பிறகு வேறு எந்த நினைவிற்கும் அவன் மனதில் இடமிருக்கவில்லை. அவன் செய்ய வேண்டியது என்னவென்பதைப் பற்றித்தான்

ஏதேனும் சந்தேகம் உண்டா? அவன் கால்களுக்குக் கட்டளையிட வேண்டிய அவசியந்தான் உண்டா? இல்லவே இல்லை! அடுத்த நிமிஷத்தில் அவன் கடலில் பாய்ந்து இறங்கினான். அலைகளைத் தள்ளிக் கொண்டு அதிவேகமாகச் சென்றான். நல்ல வேளையாகக் கடலோரத்தில் அங்கே தண்ணீர் அதிகம் இல்லை. ஆகையால் அதி சீக்கிரத்தில் வெகு தூரம் போய் விட்டான். படகின் அருகிலும் சென்று விட்டான். தண்ணீரின் ஆழம் திடீரென்று அதிகமாகி விட்டது. தத்தளிக்கும் நிலைமை ஏற்பட்டது. "ஐயோ! நான் மூழ்கிச் சாகப் போகிறேன்! என்னைக் காப்பாற்றுங்கள்!" என்று கத்தினான். படகில் யாரோ சிரிக்கும் சத்தம் கேட்டது. பிறகு சிலர் பேசும் குரல்கள் கேட்டன. படகு நின்றது. படகுக்காரன் குனிந்து கை கொடுத்தான். வந்தியத் தேவன் படகில் ஏறி உட்கார்ந்தான். படகு மேலே சென்றது.

படகில் இருந்தவர்களை வந்தியத் தேவன் ஆராய்ந்து பார்த்தான். ஒருவன் தமிழ் நாட்டானே அல்ல. அரபு நாட்டான் போல் காணப்பட்டான். அவன் எப்படி இங்கு வந்தான் என்ற வியப்புடன் மற்ற இருவரையும் பார்த்தான். அவர்கள் முகத்தில் பாதியை மறைத்து முண்டாசு கட்டிக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் தமிழ் நாட்டவர்கள் என்று தெரிந்தது. அதுமட்டுமன்று. பார்த்த முகங்களாகவும் காணப்பட்டன. எங்கே, எங்கே பார்த்தோம் இவர்களை?—ஆ! நினைவு வருகிறது! பார்த்திபேந்திர பல்லவனுடன் தம்பளையிலிருந்து திரும்பி வந்தவர்கள் அல்லவா இவர்கள்? ஆழ்வார்க்கடியான் இவர்களைத்தானே இளவரசரைக் கொல்ல வந்தவர்கள் என்று சொன்னான்? ஓகோ! இவர்களில் ஒருவனை வேறொரு இடத்தில் கூடப் பார்த்திருக்கிறோமே? மந்திரவாதி ரவிதாஸன் அல்லவா இவன்? ஆந்தை கத்துவது போல் கத்திவிட்டுப் பழுவூர் ராணியைப் பார்க்க வந்தவன் அல்லவா இவன்? சரி, சரி! இளவரசர் கப்பலில் இருப்பது தெரிந்துதான் இவர்கள் அதில் ஏறிக் கொள்ளப் போகிறார்கள்! ஆகா! இளவரசர் போகும் வழியில் இது ஓர் அபாயமா? நாம் அவசரமாய் ஓடி வந்து இந்தப் படகைப் பிடித்து ஏறியது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று?......

படகு போய்க்கொண்டிருந்தது; மரக்கலத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. படகில் இருந்தவர்கள் மௌனம் சாதித்தார்கள். வந்தியத் தேவனால் மௌனத்தைப் பொறுக்க முடியவில்லை. பேச்சுக் கொடுத்துப்பார்க்க விரும்பினான்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான்.

"தெரியவில்லையா? அதோ நிற்கும் கப்பலுக்குப் போகிறோம்!" என்றான் மந்திரவாதி. பாதி மூடியிருந்த வாயினால் அவன் பேசிய குரல் பேயின் குரலைப் போலிருந்தது.

"கப்பல் எங்கே போகிறது?" என்று வந்தியத் தேவன் கேட்டான்.

"அது கப்பலுக்குப் போன பிறகுதான் தெரிய வேண்டும்" என்றான் ரவிதாஸன்.

மறுபடியும் படகில் மௌனம் குடிகொண்டது. வெளியில் கடலின் ஓங்கார நாதம் சூழ்ந்தது.

இப்போது மந்திரவாதி ரவிதாஸன் மௌனத்தைக் கலைத்தான். "நீ எங்கே அப்பா, போகிறாய்?" என்று கேட்டான்.

"நானும் கப்பலுக்குத்தான் போகிறேன்" என்றான் வந்தியத்தேவன்.

"கப்பலுக்குப் போய், பிறகு எங்கே போவாய்?"

"அது கப்பலில் ஏறிய பிறகுதான் தெரிய வேண்டும்!" என்று பாடத்தைத் திருப்பிப் படித்தான் வந்தியத் தேவன்.

படகு கப்பல் அருகில் சென்றது. மேலே யிருந்து ஓர் ஏணி கீழே இறங்கியது. அதில் ஒவ்வொருவராக ஏறிச் சென்றார்கள். ஏணி மேலே போவதற்குள் வந்தியத் தேவன் அதில் தொத்திக் கொண்டான். கப்பலின் மேல் தளத்தில் ஏதோ பேச்சு நடந்தது. அவனுக்குப் புரியாத பாஷையாகத் தொனித்தது. வந்தியத் தேவன் இன்னும் துரிதமாக ஏணியின்மீது ஏறிக் கப்பலின் தளத்தில் குதித்தான். குதித்த உடனே "எங்கே இளவரசர்?" என்று இரைந்துகொண்டு சுற்று மூற்றும் பார்த்தான்.

சுற்றிலும் அவன் பார்த்த காட்சி அவனுடைய இரும்பு நெஞ்சத்தையும் சிறிது கலக்கிவிட்டது. அவனைச் சுற்றிலும் பயங்கர ரூபமுள்ள அரபு நாட்டு மனிதர்கள் நின்றார்கள். ஒவ்வொருவனும் ஒரு ராட்சதனைப்போல் தோன்றினான். எல்லாரும் அவனை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அவனுடைய கேள்விக்கு யாரும் பதில் சொல்லவில்லை.

"ஏதோ பெரிய தவறு செய்து விட்டோம்" என்ற உணர்ச்சி வந்தியத் தேவன் உள்ளத்தில் உதித்தது. இது

சோழ நாட்டுக் கப்பல் அல்ல; இருக்க முடியாது. இதில் உள்ளவர்கள் தமிழ் மாலுமிகள் அல்ல. பெரிய பெரிய குதிரைகளை விற்பதற்காகக் கொண்டு வரும் அரபு நாட்டு மனிதர்கள்.

இந்தக் கப்பலில் இளவரசர் இருப்பது இயலாத காரியம். அவசரப்பட்டு வந்து ஏறி விட்டோம். தப்பிச் செல்வது எப்படி? கப்பல் ஓரத்தில் நின்று குனிந்து பார்த்தான். படகு போய்க் கொண்டிருந்தது. "படகுக்காரா! நிறுத்து!" என்று கூவிக்கொண்டு கடலில் குதிக்கப் போனான். அச்சமயம் ஒரு வஜ்ரத்தை நிகர்த்த கை பின்னாலிருந்து அவனுடைய குரல்வளையைப் பிடித்தது. ஓர் இழுப்பு; ஒரு தள்ளு. வந்தியத் தேவன் கப்பல் தளத்தின் மத்தியில் வந்து விழுந்தான். அவனுக்கு உக்கிர ஆவேசம் வந்து விட்டது. குதித்து எழுந்து அவனைத் தள்ளியவனது முகவாய்க் கட்டையில் ஓங்கி ஒரு குத்து விட்டான். அந்த ஆறு அடி உயரமுள்ள அராபியன் தனக்குப் பின்னால் நின்றவனையும் தள்ளிக்கொண்டு படார் என்று விழுந்தான்.

வந்தியத் தேவனுக்குப் பின்னால் பயங்கரமான உறுமல் சத்தம் கேட்டது. நல்ல சமயத்தில் திரும்பிப் பார்த்தான். இல்லாவிட்டால் அவன் முதுகில் கத்தி பாய்ந்திருக்கும். திரும்பிய வேகத்தோடு கத்தியைத் தட்டி விட்டான். அது 'டணார்' என்ற சத்தத்துடன் கப்பலில் விழுந்து, அங்கிருந்து தெறித்துப் பாய்ந்து, கடலில் விழுந்து மறைந்தது.

மறு கணம் வந்தியத் தேவனை நாலா புறத்திலிருந்தும் பலர் வந்து பிடித்தார்கள். பிடித்தவர்கள் புரியாத பாஷையில் ஏதேதோ பேசிக் கொண்டார்கள். அவர்களுடைய தலைவன் அதிகாரக் குரலில் கட்டளையிட்டான். உடனே மணிக் கயிறு கொண்டு வந்து வந்தியத் தேவனுடைய கால்களையும் கைகளையும் கட்டினார்கள். கைகளை உடம்போடு சேர்த்துப் பிணைத்தார்கள். பின்னர் நாலு பேராக அவனைத் தூக்கிக் கொண்டு கீழ்த் தளத்துக்குப் போனார்கள். போகும்போதெல்லாம் உதைத்துத் திமிறி விடுவித்துக் கொள்ள வந்தியத் தேவன் முயன்றான். அந்த முயற்சி பலிக்கவில்லை. கப்பலின் அடித் தளத்தில் கொண்டுபோய் அங்கே அடுக்கி யிருந்த மரக் கட்டைகளின் மீது அவனைப் படார் என்று போட்டார்கள். அந்தக் கட்டைகளில் ஒன்றோடு சேர்த்துக் கட்டி விட்டு மேலே சென்றார்கள்.

கப்பல் அப்படியும் இப்படியும் அசைந்து ஆடிற்று. கப்பல் தன் பிரயாணத்தைத் தொடங்கி விட்டது என்று வந்தியத் தேவன் அறிந்தான். கப்பல் ஆடியபோது மரக்கட்டைகள் அவன் மீது உருண்டு விழுந்தன. அவற்றை விலக்கிக் கொள்ள முடியாமல் அவனுடைய கைகள் கட்டப் பட்டிருந்தன.

"இந்த முறை மட்டும் தப்பிப் பிழைத்தால் இனி அவசரப்பட்டு எந்தக் காரியமும் செய்வதில்லை. ஆழ்வார்க்கடியானைப் போல் ஆழ்ந்து யோசித்த பிறகே செய்ய வேண்டும்" என்று வந்தியத் தேவன் மனதில் எண்ணிக் கொண்டான்.

அச்சமயம் பேய் சிரிப்பது போன்ற சிரிப்புச் சத்தம் அருகில் கேட்டது. வந்தியத் தேவன் மிகச் சிரமத்துடன் சற்று முகத்தைத் திருப்பிப் பார்த்தான். அங்கே மந்திரவாதி ரவிதாஸன் நின்று கொண் டிருப்பதைக் கண்டான். இது வரை மந்திரவாதியின் முகத்தில் பாதியை மறைத்துக்கொண் டிருந்த துணி இப்போது நீக்கப்பட் டிருக்கிறது.

"அப்பனே! அந்தச் சோழர் குலத்துப் புலியைத் தேடிக் கொண்டு வந்தேன். புலி அகப்படவில்லை. ஆனால் வாணர் குலத்து நரியாகிய நீ அகப்பட்டுக் கொண்டாய்! அந்த வரைக்கும் அதிர்ஷ்டந்தான்!" என்றான்.

* * *

மேற் கூறிய நிகழ்ச்சிகளில் வந்தியத் தேவன் படகில் ஏறிச் சென்ற வரையில்தான் கரையில் இருந்தவர்கள் பார்த்தார்கள். மரக்கலத்திற்குள்ளே நடந்தது இன்னதென்பது படகோட்டிச் சென்றவனுக்கே தெரியாது. அவன் உடனே திரும்பிக் கரைக்கு வந்து சேர்ந்தான்.

சேனாதிபதி முதலியவர்கள் படகில் ஏறிக் கொண்டார்கள். இனி அந்த மரக்கலத்தைத் தொடர்ந்து போய்ப் பிடிக்க முடியாது என்ற தீர்மானத்துக்கு அவர்கள் வந்திருந்தார்கள். ஆகையால் தொண்டைமானாற்றின் சங்கமத்துக்குப் போய்ப் பார்க்க அவர்கள் எண்ணினார்கள். இன்னொரு கப்பல் அங்கே இருக்கலாம். அதில் ஒரு வேளை இன்னும் இளவரசர் இருக்கலாம். எப்படியும் ஏதாவது செய்தியாவது கிடைக்கும் அல்லவா?

படகுக்காரனைக் கேட்டுப் பார்த்தார்கள். அவனிடமிருந்து ஒரு விவரமும்

தெரியவில்லை. "படகில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தேன். அதிகாலையில் யாரோ வந்து தட்டி எழுப்பினார்கள். கப்பலில் கொண்டு விட்டால் நிறையப் பணம் தருவதாகச் சொன்னார்கள். நீங்கள் விழித்தெழுவதற்குள் திரும்பி வந்து விடலாம் என்று போனேன். வேறொன்றும் தெரியாது" என்றான்.

• • •

மேலே கண்ட வரலாறுகளில் ஆழ்வார்க்கடியான் தான் அறிந்த வரையில் ஒன்று விடாமல் இளவரசரிடம் கூறினான்.

பின்னர், "இளவரசே! வந்தியத்தேவன் கடலில் குதித்துப் பாய்ந்து சென்றபோது அவனைத் தொடர்ந்து நானும் போகலாமா என்று முதலில் நினைத்தேன். ஆனால் எனக்குக் கடல் என்றால் எப்போதுமே சிறிது தயக்கம் உண்டு. நன்றாக எனக்கு நீந்தத் தெரியாது. அத்துடன், அதோ போகிறதே, அந்தக் கப்பலைப் பற்றியும் எனக்குச் சிறிது சந்தேகம் ஏற்பட்டது. அதில் தாங்கள் ஏறிப்போவது சாத்தியமில்லை என்று தோன்றியது. இன்னும், அந்தக் கப்பல் சோழ நாட்டுக் கப்பலாயிருக்க முடியுமா என்ற ஐயமும் உண்டாயிற்று. இதைப் பற்றிச் சேனாதிபதியிடமும் கூறினேன். இருவரும் இங்கே வந்து பார்த்து முடிவு செய்வது என்று தீர்மானித்துக் கொண்டு வந்தோம். தங்களைப் பார்த்த பிறகுதான் எங்கள் மனம் நிம்மதி அடைந்தது!" என்றான்.

ஆழ்வார்க்கடியான் கூறியதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டு வந்த அருள்மொழிவர்மர், "ஆனால் என் மனதில் நிம்மதி இல்லை, திருமலை! வந்தியத்தேவன் அந்தக் கப்பலில் போகிறான். அவனைப் பழுவேட்டரையர்கள் பிடித்துப் பாதாளச் சிறையில் தள்ளி விடுவார்கள்!" என்றார்.

அப்போது சேனாதிபதி "இளவரசே! அந்தக் கொடியவர்களின் அதிகாரத்தை எதற்காகப் பொறுத்திருக்க வேண்டும்? தாங்கள் மட்டும் சம்மதம் கொடுங்கள். அடுத்த பௌர்ணமிக்குள் பழுவேட்டரையர்களின் அதிகாரத்தைத் தீர்த்துக் கட்டி அந்தப் பாதாளச் சிறையில் அவர்களையே அடைத்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்" என்றார்.

"ஐயா! என் தந்தையின் விருப்பத்துக்கு விரோதமாக நான் அணுவளவும் நடந்து கொள்வேன் என்று தாங்கள் கனவிலும் எதிர்பார்க்க வேண்டாம்!" என்றார் இளவரசர்.

இந்தச் சமயத்தில் குதிரை ஒன்று வேகமாக வரும் சத்தம் கேட்டு எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள். சற்றுத் தூரத்திலேயே அந்தக் குதிரை நின்றது. முகக் கயிறு, உட்கார ஆசனம் ஒன்றுமில்லாமல் அந்தக் குதிரை மேல் ஏறி வந்தவள் ஒரு ஸ்திரீ என்று அறிந்ததும் அனைவரும் வியப்படைந்தார்கள்.

## அட்டைப்பட விளக்கம்

இந்த இதழ் அட்டைப் படச் சித்திரம், மகாகவி ரவீந்திரநாத் டாகூர் எழுதிய கீதாஞ்சலியில் உள்ள ஒரு கவிதையைச் சித்திரிக்கிறது. அந்தப் பாடலின் தமிழ் மொழி பெயர்ப்பு:—

தங்களிடமிருந்து நான் ஏதும் விரும்பவில்லை. தங்கள் செவிகளில் ரகசியமாகக் கூட என் பெயரைச் சொல்லவில்லை. தாங்கள் என்னைப் பிரிந்து சென்றபோது நான் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மௌனமாகத்தான் நின்றேன்.

நான் கிணற்றடியில், நீண்டு விழுந்த மர நிழலில் தனியாக நின்று கொண்டிருந்தேன். என்னுடன் வந்த மாதர்கள் எல்லாம் குடத்தில் தண்ணீர் நிரப்பிக்கொண்டு சென்று விட்டார்கள். அவர்கள் போகும்போது "எங்களுடனேயே வந்துவிடேன். காலைப் பொழுது ரொம்பவும் ஏறி நண் பகல் ஆகப்போகிறது, வா" என்று அழைத்தார்கள். நான்தான் இனம் தெரியாத சிந்தனைகளில் மூழ்கி அங்கேயே நின்று விட்டேன்.

அப்போதுதான் தாங்கள் வந்தீர்கள். தாங்கள் வந்தபோது தங்கள் காலடிச் சத்தம்கூட என் காதில் விழவில்லை. தாங்கள் என்னைப் பார்த்தீர்கள். அந்தப் பார்வையில் துயரம் தெரிந்தது. "அம்மா, நான் ஒரு வழிப்போக்கன்; தாகமாக இருக்கிறது" என்று மெல்லிய குரலில் கூறினீர்கள். அந்தக் குரலில் தாங்கள் களைப்புற்றிருக்கிறீர்கள் என்பதை உணர்ந்தேன். உடனே என் பகற் கனவிலிருந்து விழித்துக்கொண்டேன். தாங்கள் சேர்த்துப் பிடித்த கரங்களில் தண்ணீர் விட்டேன். அப்போது தலைக்குமேலே இலைகள் சலசலத்தன. எங்கோ இருட்டிலிருந்து குயில் ஒன்று கூவிற்று. தெருத் திருப்பத்திலிருந்த புஷ்பச் செடிகளிலிருந்து நறுமணம் மென்காற்றில் தவழ்ந்து வந்தது.

பிறகு தாங்கள் என் பெயரைக் கேட்டீர்கள். எனக்கு வெட்கமாக இருந்தது. பதில் சொல்லாமல் நின்றேன். உண்மையாகவே கேட்கிறேன்: என் பெயரை நினைவு வைத்துக்கொள்ளும் அளவிற்கு அப்படி யென்ன உதவி செய்து விட்டேன்! ***




## 2

**ப**கவானை மறந்துவிட்டு வெறும் பாண்டித்தியத்துக்கும் அதனால் அடையக் கூடிய புகழுக்கும் ஆசைப் பட வேண்டாம் என்று முதல் பாட்டில் எச்சரித்துவிட்டு, அடுத்தபடி பணம் சேர்க்கும் மோகத்தைப் பற்றி ஸ்ரீ சங்கரர் சொல்லுகிறார்.

பணம், பணம் என்னும் ஆசை எண்ணிறந்த ஜனங்களுக்கு அளவற்ற துக்கம் உண்டாக்கி வருகிறதை அனைவரும் கண்டாலும் கண்டதிலிருந்து மக்கள் அறிவு அடைவதில்லை.

செல்வம் சட்டுமாசை யொரு பொல்லாத் தாகம்
வெல்லுதல் வேண்டு மந்த நோயை
நல்லமுடிவு செய்துகொள் உள்ளத்திலே
சொந்தத்தில் பாடுபட்டு வந்தது
அந்தமட்டில் போது மென்று மகிழ்ந்தமர்.

* * *

மூடஜஹீஹி தனாகம த்ருஷ்ணாம்
குரு சத் புத்திம் மனஸி விதிருஷ்ணாம்
யல்லபஸே நிஜகர்மோ பாத்தம்
வித்தம் தேன விநோதய சித்தம்

ஞானமும் பக்தியும் அனைவருக்கும் உரித்தான பெருஞ் செல்வம். பாமர மக்களும் உள்பட எல்லோருக்கும் பாடியது பஜ கோவிந்தம். சங்கருடைய உபதேசம் உலகத்தைத் துறந்த சந்நியாசிகளுக்கு மட்டுமல்ல. கஷ்டப்பட்டு வாழ்க்கை நடத்தும் சாதாரண மக்களுக்கென்று பாடுகிறார்.

"யல் லபஸே நிஜகர்மோ பாத்தம் வித்தம்" என்றால் உன் சொந்த உழைப்பினால் நீ சம்பாதிக்கும் பொருளை வைத்து, "தேன விநோதய சித்தம்" அதை அனுபவித்து உள்ளத்தில் திருப்தி பெறுவாயாக என்கிறார். பணம், பணம் இன்னும் பணம் என்று தீராத தாகத்தை உண்டாக்கிக் கொண்டு துக்கப்படாதே! அது உனக்கு நன்மையல்ல; அதை உன் சத்துருவாகக் கருது: அதை வென்று உள்ளம் திருப்தி நிலையில் நிற்கச் செய் என்கிறார். நீ கோருவது மகிழ்ச்சியல்லவா? நல்ல வழியில் பாடுபட்டு அடைந்த சொத்தை வைத்துக் திருப்தி அடையாமல், இது இல்லையே அது இல்லையே என்று துக்கப்படுவது மடமை, மகிழ்ச்சிக்கு வழியல்ல.

இறல்சுனும் என்னது வெஃகின்—விறல்சனும்
வேண்டாமை என்னும் செருக்கு

என்று உறுதியாகச் சொன்னார் வள்ளுவனார்.

मूढ जहीहि धनागमतृष्णाम्
कुरु सद्बुद्धिं मनसि वितृष्णाम् ।
यल्लभसे निजकर्मोपात्तम्
वित्तं तेन विनोदय चित्तम् ॥

## 3

**மூ**ன்றாவது பாட்டில் சங்கரர் காமத்தைப் பற்றிச் சொல்லுகிறார். எதை வென்றாலும் இந்தப் பிசாசை வெல்வது கடினம் என்பது அனைவரும் அறிந்த உண்மை.

நம்பாதே நரம்பு வேகத்தை
நோக்காதே நாரியர் தேகத்தை
வலையில் ஏன் வாவெனல்
விவேகமழிக்கும் வியா மோகத்தை?

மார்பின் அழகும் இடையின் அந்தமும்
வேர்வையு மலமும் அழுகும் தசையுமென்று
தீர்ந்த இந்த உண்மையை
ஓர்ந்தோர்ந்து உறுதி அடைவாய்!

நாரீ ஸ்தனபர நாபீ தேசம்
த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம்
ஏதன் மாம்ஸ வஸாதி விகாரம்
மனஸி விசிந்தய வாரம் வாரம்

கண்ணை இங்கும் அங்கும் வேட்டையாட விடாதே. செல்லக் கூடாத இடத்தில் அது செல்லாமல் காத்துக் கொள். இல்லையேல் ஏமாந்து போய், மோகாவேசத்தில் சிக்கிக் கொள்வாய் என்கிறார். அழகாய்த்தான் இருக்கிறார்கள். ஆயினும் அவர்களுடைய உடலின் அந்தத்தை அளந்து மகிழ வேண்டாம். இதில் என்ன குற்றம் என்று எண்ணி மோசம் போக வேண்டாம். மகளிர் பேரில் பார்வையைச் செல்ல விட்டாயானால் கட்டாயம் ஆசை வளர்ந்து உள்ளத்தின் உறுதி நீயும் அறியாமல் வர வர கரைந்து போகும். 'ஆவேசம்' என்றால் மனம் உன் வசத்தில் நிற்காமல் தன் பாட்டுக்குப் போவது. புத்தியை ஏமாற்றும் இந்த அழகெல்லாம் உண்மையில் என்ன வென்பதை அடிக்கடி சிந்தனை செய்து மனதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிறார். இறைச்சியும் நிணமும் தவிர வேறென்ன? பொருள் இன்னதென்று தெரிந்த பின் வெளி வடிவத்தைக் கண்டு உண்மையை மறந்து விடக் கூடாதல்லவா? மனதில் உறுதியும் அறிவும் இருந்தால் கண்ணைப் பற்றிக் கவலை யில்லை. அந்த உறுதி இல்லாம லிருக்க, கண்ணை ஏதேச்சையாய் இங்கு மங்கும் நோக்க விட்டால் மோசம் போவோம்.

புலன்களை அடக்கப் பயில வேண்டும், இதைப் பயின்ற பின் உள்ளத்தில் சுதந்திரம் அடைவோம், அதன் மேல் சாந்தம் உண்டாகும். ஆசையும் மோகமும் முதலில் மகிழ்ச்சி போல் தோன்றும், முடிவில் துக்கமே யாகும்.

புலன்களின் வேகத்தை அடக்கி ஆயாச மில்லாமல் மனம் சாந்த நிலையில் நின்று அதன்மேல் உண்டாகும் மகிழ்ச்சியே நிலையாக நிற்கும் ஆனந்தம். அதை அடைய வேண்டுமானால் முதல் கண்களை அடக்கி ஆளவேண்டும். இவன் ஞானி, இவன் மகாத்மா என்று புகழ் பெறுவதற்கல்ல, ஒருவன் க்ஷேமத்திற்கும் உள்ளத்தின் அமைதிக்குமே இது இன்றியமையாத சாதனம்.

नारीस्तनभरनाभीदेशम्
दृष्ट्वा मा गा मोहावेशम् ।
एतन्मांसवसादिविकारम्
मनसि विचिन्तय वारं वारम् ॥

# திட்டம் வேண்டும்

ஸ்ரீமான் சிவசங்கரம் பிள்ளை அவர்களுக்குத் திடீர் என்று டில்லிக்குப் போகும் வேலை ஏற்பட்டது. அடுத்தவாரம் புதன்கிழமை புறப்பட வேண்டும் என்று அந்த உத்தரவில் கண்டிருந்தது. அவருக்குச் சரியாக ஐந்துநாள் அவகாசம் இருந்தது.

ஐந்து நாளில் அவருக்குப் புறப்படுவதற்காக ஏற்பாடுகளில் எத்தனை உண்டோ அத்தனையும் செய்துகொண்டு விடலாம் ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. அவர் எதையும் திட்டம் வகுத்துக் கொண்டு அதன்படி செய்பவர். ஆகவே, தாம் டில்லிக்குப் போகவேண்டுமானால் என்ன என்ன எடுத்துக்கொள்ள வேண்டும், என்ன என்ன வாங்கிக்கொள்ள வேண்டும் என்று ஒரு ஜாபிதா தயாரித்தார்.

"ஸார், நீங்க டில்லிக்குப் போகப் போகிறீர்களாமே, டிக்கெட் வாங்கிவிட்டீர்களா!" என்று யாரோ கேட்டார்கள். "ஆ! பார்த்தீர்களா! டிக்கெட் சமாசாரமே மறந்து விட்டேன். அதைக் குறித்துக் கொள்கிறேன், என் ஜாபிதாவில்!" என்று தம் சட்டைப் பைக்குள் கையை விட்டு ஒரு நோட்டுப் புஸ்தகத்தை எடுத்துக் குறித்துக் கொண்டார்.

"ஸார், டில்லியில் இப்போ ரொம்பவும் குளிராக இருக்கும், உல்லன் சட்டைகள் எல்லாம் வாங்கி விட்டீர்களா!" என்று இன்னொருவர் கேட்டார். "உல்லன் சட்டை வேண்டுமா! கொஞ்சம் இருங்கள் குறித்துக் கொள்கிறேன்" என்று புஸ்தகத்தை எடுத்துக் கொண்டார்.

இப்படி எல்லாச் சாமான்களின் ஜாபிதாவையும் செவ்வாய்க்கிழமை இரவுவரை தயாரித்துக்கொண்டிருந்தார் ஸ்ரீமான் சிவசங்கரம் பிள்ளை. மறு நாள் பொழுது விடிந்தால் டில்லி ரயிலுக்குப் புறப்பட வேண்டும். அதைப்பற்றி அவர் சிறிதும் கவலைப் படவில்லை. திட்டம் வகுத்தாகிவிட்டது என்று சொல்லிக் கொண்டு அன்றிரவு நிம்மதியாகத் தூங்கப் போனார்.

மறு நாள் காலை பத்து மணிக்கு நான் ஸ்ரீமான் சிவசங்கரம் பிள்ளை வீட்டுப் பக்கம் போனேன். மனுஷன் கொட்டாப்புளிபோல் உட்கார்ந்து கொண்டிருந்தார். "என்ன ஸார்! டில்லிக்குப் போகவில்லையா!" என்று கேட்டேன்.

"அதை ஏன் கேட்கிறீங்க! நான் என்ன என்ன சாமான் எடுத்துக்கொண்டு போகவேண்டும் என்று எழுதி வைத்திருந்த 'திட்டம்' எங்கேயோ கெட்டுப் போய்விட்டது! நான் ஞாபக மறதியா எங்கே வைத்தேனோ தெரியவில்லை!" என்று அங்கலாய்த்தார்.

நான் என்ன பதில் சொல்வது! "ஸார், உங்கள் திட்டம் எங்கே போனாலும் டில்லி எங்கேயும் போய்விடாது. ஆகவே, இனித் திட்டம் ஏதும் போடாமல் கிடைத்த சாமான்களை எடுத்துக் கொண்டு நாளைக்காவது புறப்பட்டுப் போய்ச்சேருங்கள்" என்றேன்.

—வெங்கு

# தி பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு லி-ட்.

(இந்தியாவில் இணைக்கப்பட்டது)

**நெ. 3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ் - 5**

தந்தி விலாசம்: "EVERMANS"] :: [போன்: 85834

__மாதச் சீட்டு__

**ஆரம்பிக்கும் தேதி 10-12-51 ★ ஏலத் தேதி 15-12-51**

*10-12-1951 அன்று இன்னொரு புதிய சீட்டு ஆரம்பித்திருப்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம்.*

__சீட்டு விவரம் வருமாறு:__

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| A | கிளாஸ் டிக்கட் | ரூ. | 5000/- | மாதம் | ரூ. | 200/- |
| B | ,, ,, | ரூ. | 2500/- | ,, | ரூ. | 100/- |
| C | ,, ,, | ரூ. | 1250/- | ,, | ரூ. | 50/- |
| D | ,, ,, | ரூ. | 625/- | ,, | ரூ. | 25/- |
| E | ,, ,, | ரூ. | 500/- | ,, | ரூ. | 20/- |
| F | ,, ,, | ரூ. | 375/- | ,, | ரூ. | 15/- |

ரூ. 20க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகள்மேல் செக்குகள் பெற்றுக்கொள்கிறோம். இச்சீட்டில் சேர விரும்புபவர்கள் முழு விவரத்திற்கும் எங்களுக்கு எழுதி சீக்கிரம் இந்த சீட்டில் சேர்த்து கொள்ளவும்.

(போர்டாரின் உத்தரவுபடி)

எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

## பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் கண்டு பிடிக்கப் பட்டதிலிருந்து இனி யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டிகள் ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடெர்மினால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனாயாசமாக வைத்துக் கொண்டு, பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் கொடுக்காதீர்கள்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் கண்டு உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவிக் கொள்ளும்போது ஒரு பவுடரைப் போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தைத் தாக்குகிறது. நிக்ஸோடெர்ம் மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைத் தாக்கிக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷங்களில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப்போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடெர்ம் வேறெதையும்விட சீக்கிரமாக வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சல் ஆகியவற்றை சில நிமிஷங்களில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி — நாடிய வைத்தியம் கிடைத்ததை உணருவீர்கள். நிக்ஸோடெர்ம் ஆயிரக்கணக்கானவர்களுடைய சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார்: "பன்னிரண்டு வருஷங்களாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பிறகு நிக்ஸோடெர்ம் உபயோகித்தேன். 10 நிமிஷங்களில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தில் ஏற்பட்ட மாறுதலைக்கண்ட என் நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்."




### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாக சுத்தமாகாதவரை நிக்ஸோடெர்ம் மதிப்பை இழக்கிறது. இன்றே ஒரு நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் காண ஆச்சரியப் படுவீர்கள். மேலும் ஒரு வாரத்திற்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் அதன் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, நீங்கள் கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே ஒரு நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். அதனளித்த உத்தரவாதமே உங்களுக்கு உறுதி.




○●○

“அம்பி, அம்பி!”

அம்மா பலமாகத்தான் கூப்பிட்டாள். அம்பி அங்கே இருந்தால்தானே அது அவன் காதில் விழுவதற்கு?

எவ்வளவு தடவை கூப்பிட்டாலும் அம்பி வராமற் போகவே, அம்மா எழுந்து சமையலறையிலிருந்து வெளியேபோய் வீடு முழுவதும் அம்பியைத்தேட ஆரம்பித்தாள்.

ஒருவேளை அம்பி நாய்க்குட்டி ஜிம்மியோடு விளையாடுகிறானோ என்று தோட்டத்துப்பக்கம் போய்ப் பார்த்தாள், அம்மா. தோட்டம் நிசப்தமாயிருந்தது. உடனே அம்மாவுக்கு அம்பி அங்கே இல்லை என்பது தெரிந்துவிட்டது. அம்பி ஜிம்மியோடு விளையாடுகிறான் என்றால் ஜிம்மி வள் வள் என்று குரைப்பதையும், ஜிம்மியோடு சேர்ந்து கொண்டு அம்பியும் அதேமாதிரி குரைப்பதையும் தெளிவாகக் கேட்கலாம். ஜிம்மி கட்டிப் போட்டபடி சாதுவாகப் படுத்துக் கிடந்தது.

அம்மா அங்கிருந்து மாடிக்குப்போனாள். அம்பி ஒருவேளை தன் தங்கை கமலாவோடு விளையாடிக் கொண்டிருக்கிறானோ என்று பார்க்கத்தான் போனாள்.

மாடியிலும் சத்தமே இல்லை. கமலா உட்கார்ந்து புஸ்தகத்தை வைத்துக் கொண்டு பொம்மை பார்த்துக் கொண்டிருந்தாள். கமலாவும் அம்பியும் விளையாடுகிறார்கள் என்றால் கமலா கொடிக்கு ஒரு தடவை அழுது கொண்டு இருப்பாள். அம்பி ‘ஹஹ் ஹஹ், ஹா’ என்று சிரிப்பான்.

அம்மா மாடியிலிருந்து கீழே இறங்கி வாசற்புறத்து அறைக்குவந்து அம்பி ஒருவேளை அங்கே பள்ளிக்கூடப் பாடங்களைப் படித்துக்கொண்டிருக்கிறானோ என்று பார்த்தாள். அந்த அறையின் அருகே வரும்போதே அம்பி அங்கே இல்லை என்பது அம்மாவுக்குத் தீர்மானமாகத் தெரிந்து விட்டது.

அந்த அறையில் அப்பா இருந்தால்தானே அம்பி படித்துக்கொண்டிருப்பான்? அப்பா தான் வெளியே போயிருக்கிறாரே!

பக்கத்து வீட்டுச்சோமுவோடுதான் எங்கேயாவது விளையாடப் போயிருக்கிறானோ என்று நினைத்து அம்மா பக்கத்துவீட்டு வாசலுக்கு வந்துபார்த்தாள்.

சோமு வாசல் திண்ணையிலே உட்கார்ந்து புஸ்தகத்தை வைத்துக்கொண்டு சாதுப் பிள்ளையாகப் படித்துக்கொண்டிருந்தான். இதைப் பார்த்ததும் சரி, சோமுவின் அப்பா வீட்டில் இருக்கிறார் என்று அம்மா தீர்மானம் செய்து கொண்டாள்.

அம்பி மாடியிலும் கமலாவோடு விளையாடவில்லை; ஜிம்மியோடும் தோட்டத்தில் விளையாடவில்லை; அப்பாவின் அறையில் உட்கார்ந்துகொண்டும் படிக்கவில்லை; பக்கத்து வீட்டுச் சோமுவோடும் விளையாடப்போகவில்லை—ஆனால் அவனை வீடுமுழுவதும் எங்கேயும் காணோமே! அம்பி சொல்லாமல் எங்கேயாவது ரொம்பவும் தூரப்போய்விடுவான் என்று அம்மாவுக்குக் கொஞ்சங்கூடப் பயம் கிடையாது. ஏனென்றால் அவன் மிகவும் கெட்டிக்காரப் பயல்; அப்படியெல்லாம் அசட்டுப் பிசட்டு என்று எங்கேயாவது காணாமற் போய்விட மாட்டான்.

பின்பு அம்மா ஏன் அம்பியை அவ்வளவு அக்கறையோடு தேடினாள் என்றால் அதற்கு ஒரு காரணம் இருந்தது.

சேர்ந்தாற்போல் அரை மணி நேரம் அம்பியின் குரலே வீட்டில் கேட்கவில்லை என்றால், அவன் பெரிய விஷமமாக ஏதோ செய்து கொண்டிருப்பான் என்று அம்மாவுக்குத் தெரியும். கிட்டத்தட்ட ஒரு மணி நேரமாக அம்பி வீட்டில் இருக்கிற சந்தடியே இல்லை என்றால், அம்மாவுக்கு ஏற்பட்ட கவலைக்குக் கேட்பானேன்?

"கமலா, கமலா!" என்று கூப்பிட்டாள்.

"ஏன் அம்மா?" என்று கேட்டுக் கொண்டே கமலா மாடியிலிருந்து இறங்கிக் கீழே வந்தாள்.

"அம்பி எங்கு காணோம்? அவன் எங்கே போனான்? உனக்குத் தெரியுமா? என்னிடம் சொல்லாமல் வெளியே எங்கேயும் போக மாட்டானே?"

"கொஞ்ச நாழிகைக்கு முன்னாலே அப்பாதான் கையைப் பிடித்துக் கொண்டு அம்பியை எங்கேயோ அழைத்துக் கொண்டு போனார், அம்மா!" என்றாள் கமலா.



அம்மாவுக்கு ஒரு பெரிய கவலைவிட்டது. அம்பியை அவன் அப்பா அழைத்துக்கொண்டு போயிருக்கிறார் என்றால் அவன் விஷமம் ஒன்றும் செய்யமுடியாது. அப்பா பக்கத்தில் இருக்கும்போது விஷமம் செய்யும் அளவுக்கு அம்பி முட்டாள் பயல் அல்ல!

அம்மா அன்றைக்குக் குழந்தைகளுக்காக முறுக்குசுற்ற ஏற்பாடு செய்திருந்தாள். அம்பியை அப்பாதான் வெளியே அழைத்துக் கொண்டுபோயிருக்கிறார் என்று தெரிந்ததும் நிம்மதியாக முறுக்கு சுற்ற ஆரம்பித்தாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் அப்பா வந்தார். அவர் வந்ததும் வராததுமாக அம்மா அவரிடம்போய், "நீங்கள் நல்ல காரியம் செய்தீர்கள்! அம்பியைக் கொஞ்சநேரம் வெளியே அழைத்துக்கொண்டு போனீர்களே! இல்லாவிட்டால் நான் இன்றைக்கு முறுக்கு சுற்ற முடிந்திருக்காது. அவன் ஏதாவது விஷமம் செய்துகொண்டே யிருப்பான். அவனைக் கவனிக்கத்தான் எனக்குப் பொழுதுக்கும் சரியா யிருந்திருக்கும்!" என்றாள்.

அப்பாவுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. "அவனை நான் எங்கேயும் அழைத்துக் கொண்டு போகவில்லையே!" என்றார்.

"பின்னே அம்பி எங்கே போனான்?" என்று அம்மா கலவரத்துடன் கேட்டாள். அம்பிக்கு என்ன நேர்ந்துவிட்டதோ என்னவோ என்று அம்மாவுக்குப் பயமாய்ப் போய்விட்டது.

"அம்பியை நான் வெளியே அழைத்துப் போகவில்லை. என் அறையில் மசியைக் கொட்டி விஷமம் செய்தான். அதற்காக அவனை அந்தக் கூடத்து அறையில் விட்டுக் கதவைச் சாத்தி விட்டுப் போனேன்!" என்றார் அப்பா.

அவ்வளவுதான், அம்மாவின் பரபரப்பு அதிகமாகி விட்டது.

"அடாடா! அந்த அறையிலா அவனை விட்டுக் கதவைச் சாத்தினீர்கள்? அங்கே தானே நான் நேற்றுச் செய்த மைசூர்ப்பாகு டப்பாவை வைத்திருக்கிறேன்!" என்று சொல்லிக் கொண்டே ஓடிப் போய் அந்த அறையின் கதவைத் திறந்தாள் அம்மா. அம்பி வெளியே வந்தான்.

"அம்மா, நீ தினந்தோறும் ஒரு மைசூர்ப் பாகு வீதம் கொடுக்கும் போது அத்தனை மைசூர் பாகையும் தின்று விடத் தோன்றும். ஆனால் நிறைய மைசூர்ப் பாகைப் பார்த்ததும் எனக்குத் தின்னவே தோன்றவில்லை. எனக்கு ஒன்று கொடு, அம்மா!" என்று கேட்டான் அம்பி.

அம்மாவும் அப்பாவும் சிரித்து விட்டனர். டப்பாவைப் பார்த்தாள், அம்மா. மைசூர்ப் பாகு அவ்வளவும் வைத்தது வைத்தபடியே இருந்தது. அம்மாவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

அம்பிக்கும் கமலாவுக்கும் அம்மா மைசூர்ப் பாகு, முறுக்கு எல்லாம் கொடுத்தாள். அம்பியும் கமலாவும் அவைகளை வாங்கிக் கொண்டு விளையாடப் போனார்கள்.




'கெட்டில்' வாத்தாக மாறுகிறது.



# சிங்க வேட்டை!

சாமா

ஒரு இங்கிலீஷ்காரரும் அவர் மனைவியும் காட்டில் வேட்டையாடச் சென்றார்கள். இரண்டு பேரும் போட்டி போட்டுச் சுட ஆரம்பித்தார்கள். இருவருக்கும் கோபம்தான் அதிகரித்ததே தவிர ஒரு மிருகத்தையேனும் அவர்களால் சுட முடியவில்லை.

கடைசியில் அவர்கள் ஒரு சிங்கத்தைக் குறி வைத்துச் சுட்டார்கள். சிங்கம் அலறிக் கீழே விழுந்தது. இருவருக்கும் சந்தோஷம் தாங்க முடியவில்லை. சுட்ட சிங்கத்தின் அருகில் நின்று இருவரும் தனித்தனியே போட்டோ எடுத்துக் கொண்டார்கள். பிறகு சிங்கத்தை ஒரு கழியில் கட்டித் தங்கள் வீட்டுக்கு எடுத்துச் சென்றார்கள்.

சிங்கத்தின் உடலில் பஞ்சை வைத்து நான்தான் என் அறையில் வைத்துக்கொள்வேன் என்று இருவரும் சண்டை போட்டுக் கொண்டார்கள்.

இங்கிலீஷ்காரர் மனைவி, "நான் சிங்கத்தின் முன் பக்கத்தை என் அறையில் வரும்படி சுவரில் துளை போட்டு மாட்டிக் கொள்கிறேன். அதன் பின்பக்கம் உங்கள் அறையில் இருக்கும்!" என்று கூறினாள். அப்பொழுது திடீரென்று வேடர்கள் அங்கே ஓடிவந்தார்கள். "நாங்கள் அம்பால் அடித்து வீழ்த்திய சிங்கத்தை நீங்கள் எடுத்து வந்து விட்டீர்களா! நன்றாகப் பாருங்கள், அம்பு அடித்தே சிங்கம் விழுந்திருக்கிறது!" என்று சொல்லி உள்ளே பதிந்திருந்த அம்பைப் பிடுங்கினார்கள்.

சிங்கத்தை வேடர்கள் எடுத்துச் சென்றார்கள். இருவரும் பேந்தப்பேந்த விழித்தார்கள்.

# ஆங்கிலக் கல்வி

தத்தம் இல்லத்திலிருந்தே, பிறர் உதவியின்றியே ஒரே வருடத்திற்குள் நான்காம் படிவத்திற் கொப்பான ஆங்கில அறிவைப்பெறலாம். ஆங்கில எழுத்துக்கள் அறியாதவர்களும், இடையில் கல்வியை நிறுத்தியவர்களும் கற்கலாம். 4 அணா ஸ்டாம்புடன் விண்ணப்பிக்கவும்.

•

## கேம்பிரிட்ஜ் காலேஜ்

**(K) கைதமுக்கு, திருவனந்தபுரம்**

N. B:—S. S. L. C. தேறி கல்லூரி படிப்பிற்கு சௌகரியமற்றிருப்பவர்க்கு, பிரைவேட்டாகவே Intermediate தேறலாம். 6 அணா ஸ்டாம்புடன் விண்ணப்பிக்கவும்.



# த்வார்கின்ஸ்

என்றால் நீங்கள் முற்றிலும் நம்பலாம்.



லொரேனா நெ. 54-3 உச்சஸ்வரம் 2 செட் ரீடுகள், ரம்யமான நாதம் பெட்டியுடன் ... ... ரூ. 95/-

லொரேனா நெ. 55 மேற்கூறியது போலவே ஆனால் ஆர்கன் நாதம் ரூ. 100/-

ரூ. 60/- முதல் ரூ. 450/- வரை இதர மாடல்களிலும் உள்ளன.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்

**DWARKIN & SON, LTD.**

INVENTORS OF HAND HARMONIUM

11, Esplanade, East, CALCUTTA



## ஆஸ்துமா, மார்ச்சளி இருமல், மூச்சுத் திணறல், மூன்றே நிமிஷத்தில் அகற்றப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதிப்படுகிறீர்களா! அதிகமாக இருமுவதால் பிராணாவஸ்தையாக இருக்கிறதா! பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான வஸ்துக்களையும் சிற்சில உணவுகளையும் உட்கொள்ள முடியவில்லையா!

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ ஓர் புதிய நம்பிக்கையை அளிக்கும். மயக்க மருந்து, புகை பிடித்தல், இஞ்சக்ஷன், ஆட்டோமைஸர் இவை தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக அகன்றுவிடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி கபத்தைக் கரைத்து சிரமம் இன்றி ஸ்வாஸத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவிலேயே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 ஆண்டுகளாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக மிஸ்டர் ஜே. ஆர். இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து இறந்துவிடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்திவிட்டது. இரண்டு வருஷங்களில் அத்தொந்தரவே அவருக்கு மீண்டும் ஏற்பட்டதில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ முதல் வேளை சாப்பிட்டதும் நேரடியாக இரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று, திருப்தி யளிக்காவிடில் காலிப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறு நாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்கு நல்ல பாதுகாப்பை அளிக்கிறது.

**Mendaco**

**மெண்டாகோ**

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை அறவே அகற்றுகின்றது




நாஸிக் நகரின் சர்க்கார் பஸ் ஸ்டேஷன்.

## டி. வி. ராமானுஜம்

[பஸ் போக்குவரத்து நிர்வாகம் எவ்விதம் நடைபெற வேண்டும்? யாருடைய நிர்வாகத்தில் இருந்தால் பொது ஜனங்களுக்கு வசதியும் நன்மையும் உண்டாகும்? இந்தக் கேள்விகளுக்கு ஸ்ரீ டி. வி. ராமானுஜம் எம். ஏ. அவர்கள் இந்தக் கட்டுரையில் பதில் அளித்திருக்கிறார். ஸ்ரீ ராமானுஜம் பம்பாய் சர்க்கார் மோட்டார் பஸ் நிர்வாகத்தின் பொது ஜனத் தொடர்பு உத்தியோகஸ்தர். பொது மக்களின் தினசரி வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்புள்ள பஸ் போக்குவரத்து பம்பாயில் எவ்வளவு திறமையாக நடைபெற்று வருகிறது என்பதை அவர் புள்ளி விவரங்களுடன் இந்தக் கட்டுரையில் எடுத்துக் காட்டி யிருக்கிறார்:]

தண்ணீர் வசதி, சுகாதாரம், பொது ஜனங்களின் ஆரோக்கியம், போக்குவரத்து வசதி இவையெல்லாம் பொது ஜனங்களின் நலனுக்கும் க்ஷேமத்துக்கும் இன்றியமையாதவை. இந்த வசதிகள் எல்லாம் குறைவின்றி மக்களுக்குப் பூரணமாகக் கிடைக்க வேண்டுமாயின், லாப நோக்கம், அதாவது லாபத்தில் உள்ள ஆசை ஒழிய வேண்டும். அவ்விதம் ஒழிந்தால் தான் பொது ஜனங்களுக்கு மேலே குறிப்பிட்ட துறைகளில் பூரண வசதிகளையும் சௌகரியங்களையும் செய்து கொடுக்க முடியும்.

அதனாலேயே உலகத்தில் முன்னேற்றம் அடைந்துள்ள பல நாடுகளும் இந்தத் துறைகளைத் தவிர மற்றவைகளையே தனி நபர்களின் நிர்வாகத்துக்கு விடுகின்றன. பொதுஜன க்ஷேமார்த்தமான கைத்தொழில், வர்த்தகத் துறைகளின் நிர்வாகத்தை அந்தந்த நாட்டு சர்க்கார்களே ஏற்று நடத்துவதற்குக் காரணம் அதுதான். அவைகளின் நிர்வாகம் ஒரு சில பங்குதாரர்களின் நலன்களை அல்ல, பொது மக்களின் நலன்களை முக்கியமாகக் கொண்டே நடைபெறுகின்றன.

சில முக்கியமான கைத்தொழில்களையும் வியாபாரங்களையும் சர்க்கார்கள் தங்கள் சொந்த நிர்வாகத்தில் ஏற்று நடத்துவது என்ற முறை உலகம் முழுவதும் அனுஷ்டானத்துக்கு வந்திருக்கிறது. பொது உடைமை வாதிகள் அல்லது சமதர்ம வாதிகளுடன் எவ்வித சம்பந்தமும் இல்லாத தேசங்களில் கூட லாப நோக்கமோ, கட்டுப்பாடில்லாத போட்டியோ இல்லாமல் தேசியப் பொருளாதார சம்பந்தமான சில முக்கிய துறைகளின் நிர்வாகத்தை ஏற்றுக்கொள்வது சர்க்காரின் முழு முதற் கொள்கையாக இருந்து வருகிறது.

* * *

இந்தியாவில் ரயில்வே போக்குவரத்து முற்றிலும் தேசியமயமாகி விட்டது. அதாவது ரயில்வேக்களின் நிர்வாகத்தை முற்றிலும் சர்க்கார் ஏற்றுக்கொண்டு விட்டார்கள். ரஸ்தா போக்குவரத்து நிர்வாகமும் கொஞ்சம் கொஞ்சமாக சர்க்கார் அல்லது ஸ்தல ஸ்தாபன அதிகாரிகளின் கையில் வந்து கொண்டிருக்கிறது.

போக்குவரத்து விஷயத்தில் ஏராளமான தனி நபர்களின் போட்டியால் வீண் சேதமும் பிரயாணிகளுக்குக் கஷ்டமும்தான் ஏற்படுகின்றன. இது நிதர்சனமாகக் கண்ட உண்மையாகும்.

ரயில்வே, பஸ், படகுப் போக்குவரத்து போன்றவைகளில் போட்டி ஏற்படுவதன் மூலம் தேசத்தின் சக்தியும் செல்வமும் வீணாகிச் சிதறிப் போய் விடுகின்றன.

சகலவிதமான போக்குவரத்து சாதனங்களுக்கும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டும். போக்குவரத்துத் துறை சம்பந்தப்பட்ட வரையில் இதுதான் உலகிலுள்ள இன்றைய நாகரிக சர்க்கார்களின் குறிக்கோளாக இருந்து வருகிறது.

ஆனால் முன்பு இவ்விதத் தொடர்பு இருக்கவில்லை; எல்லாம் போட்டி மயமாக இருந்தது.

ரயில் போக்குவரத்தும் ரஸ்தா போக்குவரத்தும் கட்டுக்கோப்புள்ள இரண்டு பெரிய ஸ்தாபனங்களாக விளங்கினாலன்றி, இரண்டுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுவது முடியாத காரியம். இரண்டு ஸ்தாபனங்களும் வளர்ச்சி பெற்று பலத்துடன் விளங்க வேண்டியது அத்தியாவசியம்.

சர்க்கார் நிர்வாகத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள ரயில்வே போக்குவரத்துக்கும் எண்ணிக்கையற்ற தனி நபர்களின் நிர்வாகத்தில் உள்ள ரஸ்தா போக்கு வரத்துக்கும் உண்மையான தொடர்பு எவ்விதம் ஏற்பட முடியும்!

ரயில்வேக்கள் குடியரசு இந்தியாவின் பெரிய சொத்தாக இருக்கின்றன; மிகவும் முக்கியமான தேசிய வர்த்தக ஸ்தாபனமாகவும் இருக்கின்றன.

ரயில்வேக்களைப் போலவே ரஸ்தா போக்குவரத்து நிர்வாகமும் தேசத்தின் பொதுவான சொத்தாகும் காலம் வரும் என்பது நிச்சயம். அப்போது தேசம் முழுவதும் உள்ள பதினாயிரக் கணக்கான பஸ்களும் லாரிகளும் மோட்டார்களும் மோட்டார் தொழிற்சாலைகளும் தேசத்துக்குச் சொந்த உடைமைகளாகிவிடும்.

திறமையும் கட்டுக் கோப்பும் வாய்ந்த அத்தகைய பெரிய ஸ்தாபனம் சாதாரண காலத்திலேயே நாட்டுக்கு மிகப் பிரயோஜனகரமாக இருக்கும். தேசத்தின் நெருக்கடியான சமயங்களில் அவ்வித ஸ்தாபனத்தினால் ஏற்படக் கூடிய பலனை அளவிட்டுக் கூற முடியாது.

*　　　*　　　*

இந்த மகத்தான லட்சியத்தைக் காலதாமதமின்றிப் பூர்த்தி செய்வதற்கான வழியை இப்போது பம்பாய் மாகாணம் வகுத்து வருகிறது. அதற்கான முதல் காரியத்தையும் செய்திருக்கிறது.

போக்குவரத்து, மின்சாரம், வடிகால், நீர்ப்பாசனம் முதலிய பொதுஜன சௌகரியமான வசதிகள், லாபத்தைக் குவிக்க வேண்டும் என்ற முக்கிய நோக்கம் கொண்ட தனி நபர்கள் அல்லது தனி ஸ்தாபனங்களின் நிர்வாகத்தில் இருக்கக் கூடாது என்பது உண்மையே. அவை சகல ஜனங்களின் நலனையும் க்ஷேமத்தையும் முன்னிட்டு சர்க்கார் நிர்வாகத்தில் இருக்க வேண்டும் என்பதும் உண்மையே. மேற்படி நிர்வாகத்தில் லாப ஆசை இருக்கக் கூடாதென்றாலும், அவை கண்டிப்பான வியாபார முறைகளை அடிப்படையாகக் கொண்டே நிர்வகிக்கப் படவேண்டும்.



டி. வி. ராமானுஜம்

இந்தச் சாதனங்களை உபயோகிக்கும் பொது ஜனங்களுக்குத் திட்டத்துக்கு மேல் அதிகச் சலுகைகள் காட்டக் கூடாது; அதே சமயம் அவைகளை உபயோகிப்பது பொது ஜனங்களுக்குத் தண்டனையாக இருக்கவும் கூடாது. அந்த இருவித விபரீதங்களையும் தவிர்த்து நடுக்கண்ட நியாமான ஒரு முறையை அனுஷ்டிக்க வேண்டும்.

மேலே குறிப்பிட்ட சாதனங்களை உபயோகிக்கும் ஜனங்களிடமிருந்து அமிதமான கட்டணம் வசூலிக்கக் கூடாது. அவை ஜனங்களிடமிருந்து மறைமுகமாக வரிவசூலிக்கும் கருவிகளாகி விடக் கூடாது. அவ்வாறு அமிதமான கட்டணங்களின் மூலம் அதிக வருமானம் கிடைக்கலாம். அந்த வருமானத்தைக் கொண்டு வரிகளைக் குறைப்பதன் விளைவாக ஏற்படும் நஷ்டத்தை ஈடு செய்ய முற்படுவது விபரீதமான செயலாகும். அமித கட்டணங்கள் விதிப்பது எவ்வளவு ஆட்சேபகரமானதோ, அதுபோலவே செலவுக்குக் கட்டுபடியாகாத முறையில் நஷ்டத்துக்குப் போக்குவரத்து நிர்வாகத்தை நடத்துவதும் ஆட்சேபகரமானதுதான். அவ்வாறு நஷ்டத்துக்கு நடத்துவது வரி கொடுக்கும் பொது ஜனங்களின் தலையில் அனாவசியமான பாரத்தைச் சுமத்துவதாகிவிடும்.

லாப நோக்கத்தைத் தவிர்க்க வேண்டும் என்பதற்காக கற்பனா சக்தியின்றியும் பொறுப்பில்லாமலும் உற்சாகமற்றும் காரியங்களைச் செய்யக் கூடாது. சோம்பேறித் தனமும் 'சிவப்பு நாடா' வழக்கமும் நிலவுவதற்கு இடம் கொடுக்கக் கூடாது. இவையெல்லாம் சர்க்காரால் நிர்வகிக்கப்படும் பெரிய ஸ்தாபனங்களின் குணாதிசயங்கள் என்று புகார் கூறப்படுகின்றன அல்லவா! அத்தகைய புகார்கள் எழுவதற்குச் சிறிதும் இடம் கொடுக்கக் கூடாது.

தனி நபர்களின் நிர்வாகத்தில் பல நல்ல அம்சங்கள் இருக்கின்றன. சர்க்கார் ஏற்று நடத்துவதில் பல சௌகரியங்கள் இருக்கின்றன. மேற்படி நல்ல அம்சங்களும் சௌகரியங்களும் ஒன்று சேர்ந்து திகழ்வதே பொதுஜன வசதிக்கான காரியங்களைச் சர்க்கார் தங்களுடைய நிர்வாகத்தில் ஏற்றுக் கொள்வதன் நோக்கமாக இருக்க வேண்டும்.

இந்தக் கஷ்டமான லட்சியம் எளிதில் நிறைவேறுவதற்கான வழியை அறிவிலும் ஆற்றலிலும் முன்னேற்றம் அடைந்துள்ள மேல் நாடுகள் கண்டு பிடித்திருக்கின்றன.

அதாவது பொதுஜன க்ஷேமார்த்தமான தொழில்களைச் சர்க்கார் தங்கள் நேர் நிர்வாகத்தின் கீழ் உள்ள இலாகாக்களாக நடத்தக் கூடாது; சுயேச்சையான, சட்டத்துக்கு உட்பட்ட கார்ப்போரேஷன்களின் நிர்வாகத்தில் நடத்த வேண்டும். பல துறைகளில் முன்னேற்றமடைந்துள்ள மேல் நாடுகள் கண்டு பிடித்துள்ள வழி இதுதான்.

வியாபாரத் திறமையுள்ளவர்களும் மிகுந்த நிர்வாக அநுபவம் வாய்ந்தவர்களும் ஒன்று சேர்ந்து நிர்வாகத்தை நடத்துவதற்குக் கார்ப்பொரேஷன் முறை உதவியாக இருக்கிறது.

இந்தப் புதிய முறையைப் பம்பாய் சர்க்கார் பின்பற்ற முற்பட்டிருக்கிறார்கள். அதற்கிணங்க அவர்கள் பம்பாய் ராஜ்ய ரஸ்தா போக்குவரத்து கார்ப்பொரேஷன் என்று ஒரு ஸ்தாபனத்தை அமைத்திருக்கிறார்கள்.

1949-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் அந்த ஸ்தாபனம் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டது.



பம்பாய் சர்க்கார் மோட்டார் பஸ் தொழிற்சாலையில், பஸ்ஸில் இணைக்கப்பட வேண்டிய மின்சாரக் கருவிகளை பம்பாய் பிரதம மந்திரி கனம் பி. ஜே. கேர் பார்வை யிடுகிறார்.

பம்பாயில் கூட முதலில் போக்குவரத்து நிர்வாகம் சர்க்காரைச் சேர்ந்த ஓர் இலாக்காவாகவே ஆரம்பமாயிற்று. சுதேச சமஸ்தானங்களைச் சேர்க்காமல் பம்பாய் மாகாணம் முழுவதும் பிரயாணிகளின் பஸ் போக்குவரத்தை விஸ்தரிப்பதற்காக மூன்று வருஷத் திட்டம் ஒன்றைத் தயாரித்தனர். இந்தத் திட்டத்தின்படி பிரயாணிகளின் போக்குவரத்துக்காக மாத்திரம் இரண்டாயிரம் பஸ்கள் ஓடுவதற்கு ஏற்பாடாகி யிருந்தது.

பிறகு பல சமஸ்தானங்கள் பம்பாய் மாகாணத்துடன் இணைக்கப்பட்டதால், மேற்படி மாகாணம் மிகவும் பெரிதாகி விட்டது. எனவே முதலில் தயாரித்த திட்டத்தை மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

சமஸ்தானங்கள் எல்லாம் இணைக்கப் பட்டபின் பம்பாய் மாகாணம் பதின்மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது.

இம்மாகாணத்தில் 1948 ஜூன் மாதம் ரஸ்தா போக்குவரத்து நிர்வாகத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ள முற்பட்டார்கள். அதிலிருந்து இன்று வரையில், அதாவது சென்ற மூன்று வருஷ காலத்தில் இந்தத் திட்டம் மிகவும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. இப்போது இம்மாகாணத்தின் பத்து பகுதிகளில் சர்க்காருடைய நிர்வாகத்தில் தான் ரஸ்தா போக்குவரத்து நடைபெற்று வருகிறது. இன்னும் ஒரு வருஷத்தில் மீதியுள்ள மூன்று பகுதிகளையும் சேர்த்து மாகாணம் முழுவதும் மேற்படி நிர்வாகத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொண்டு விடுவார்கள். அப்போது மொத்தம் சுமார் 2500 சர்க்கார் பஸ்கள் ஓடிக் கொண்டிருக்கும்.

பம்பாய் மாகாண ரஸ்தா போக்குவரத்து திட்டம் முதலில் 35 வண்டிகளைக் கொண்டு புனா பகுதியில் ஆரம்பமாயிற்று.

1948 ஜூன் மாதம் 35 பஸ்களுடனும் தினசரி 4385 ரூபாய் வருமானத்துடனும் ஆரம்பமான போக்குவரத்து மூன்று வருஷங்களில் அபாரமாக அபிவிருத்தி அடைந்து விட்டது. இப்போது 1500 பஸ்களுக்குமேல் ஓடுவதுடன், தினசரி வருமானம் 1,49,606 ரூபாயாகப் பெருகி யிருக்கிறது.

1948-ல் பஸ் போக்குவரத்தின் தூரம் 310 மைல்களாக இருந்தது. இன்றோ 20,443 மைல்கள் தூரம் பஸ்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன.

1948-ல் சர்க்கார் பஸ்களில் மாதம் ஒன்றுக்கு மொத்தம் 73,732 பேர் பிரயாணம் செய்தனர். இப்போதோ ஒரு மாதத்துக்குப் பிரயாணிகளின் தொகை 61,86,067 ஆகப் பெருகியிருக்கிறது.

ஆரம்பத்தில் பம்பாய் மாகாண ரஸ்தா போக்குவரத்து கார்ப்பொரேஷனில் மொத்தம் 413 சிப்பந்திகள் வேலை செய்தனர்; இன்று சுமார் 12,000 சிப்பந்திகள் வேலைசெய்து வருகிறார்கள்.

எனினும் வருமானப் பெருக்கத்தைக் கொண்டோ, பிரயாணிகளின் எண்ணிக்கையைக் கொண்டோ அந்தத் திட்டத்தின் வெற்றியை நிர்ணயிக்க முடியாது. (அடுத்த இதழில் முடியும்)



ஸதாரா பஸ் ஸ்டேஷன். இது ஒரு பெரிய ரயில்வே ஸ்டேஷனைப் போல் வசதியாக இருப்பதைப் பாருங்கள்.

# வனஜாவின் மன்னி

வி. எஸ். ஆர்.

கோவிலில் இருந்துவந்த அலமேலு அம்மாள் "வனஜா! வனஜா!" என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தாள். அவள் எதிரே வனஜா வரவில்லை. ஆனால் அவளுக்குப் பதிலாகப் பத்மா வந்து நின்றாள்.

"என்ன அம்மா, என்னவேணும்?" என்று கேட்டபடி நெற்றியில் அரும்பியிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டாள் பத்மா.

"மாட்டுக்காரன் மாட்டை மேய்த்துக் கொண்டு வந்து விட்டான். கொல்லைக் கதவைத் திறந்து விடுவதற்காக வனஜாவைக் கூப்பிட்டேன். அவள் எங்கே?" என்று கேட்டாள் அலமேலு.

பத்மா அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல், "நான்தான் திறந்து விடுகிறேனே, அம்மா!" என்று கூறிவிட்டு வீட்டின் பின் பக்கம் ஓடினாள்.

அலமேலுவின் கண்கள் சுற்று முற்றும் பார்த்தன. ஆனால் வனஜா அங்கிருந்தால் தானே? 'இன்றைக்கும் சொல்லிக் கொள்ளாமல் போய் விட்டாளா?' என்று முணுமுணுத்த வண்ணம் ஊஞ்சலில் உட்கார்ந்தாள். இதற்குள் அங்கே வந்த பத்மாவைப் பார்த்து, "இவள் எங்கே போனாள்?" என்று சற்று கோபத்துடனே கேட்டாள்.

"சங்கீத சபையிலே கச்சேரியாம். அடுத்த அகத்து லக்ஷ்மி வந்து கூப்பிட்டாள். வனஜாவும் போயிருக்கிறாள்" என்று பத்மா கூறினாள்.

"பேஷ், ரொம்ப நன்றாய் இருக்கிறது மரியாதை! நாட்டுப் பெண்ணாக லக்ஷணமாக வீட்டு வேலையைக் கவனிப்போம் என்று இல்லாமல் இப்படியா பாட்டு, கூத்து என்று ஓடுவார்கள்?" பத்மாவின் முகத்தில் புன்னகை அரும்பியது.

"சிறு வயது தானே அம்மா? சந்தோஷமாகப் போய்க் கேட்டுவிட்டு வரட்டுமே. நான்தான் இருக்கிறேனே வீட்டுக் காரியத்தைப் பார்த்துக் கொள்ள!" என்றாள்.

"இந்த வீட்டில் உழைக்க நீ ஒருத்தி இருக்கிறாய் என்ற தைரியத்தில் தானே போயிருக்கிறாள்? கூடமாட உனக்கு ஒத்தாசை செய்வோம் என்ற புத்தி வேண்டாமா?" என்று கடிந்து கொண்டாள் அலமேலு.

"என்ன தொலையாத காரியம்? நானே பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று கூறிவிட்டுப் பத்மா சமையல் அறைக்குச் சென்றாள்.

அலமேலுவின் மூத்த நாட்டுப் பெண் பத்மா. அவள் புக்ககம் வந்து ஐந்து வருஷங்கள் ஆகியிருந்தன. அடக்கமும் பெருந்தன்மையும் அன்பும் நிறைந்த பத்மா புக்ககத்தினரின் உள்ளங்களைக் கவர்ந்துவிட்டாள். எத்தனையோ வருஷங்களாகக் குடும்பத்துக்காக உழைத்து உடல் தேய்ந்த அலமேலுவுக்குப் பத்மா பரிபூரண ஓய்வு கொடுத்தாள். அலமேலு எந்தக் காரியம் செய்ய ஆரம்பித்தாலும் 'நான் செய்கிறேனே!' என்று அவள் ஓடிவந்து அந்த வேலையை ஏற்றுக் கொள்வாள். லக்ஷிய மனைவியாகப் பத்மா தனக்குக் கிடைத்ததில் ராஜாராமன் எவ்வளவு பெருமையும் ஆனந்தமும் அடைந்தானோ அதைவிடப் பன்மடங்கு குதூகலம் அலமேலு அடைந்தாள். "அலமேலு! நீ பாக்கியம் செய்தவள். பத்மாவைப் போல் நாட்டுப்பெண் எல்லோருக்கும் கிடைப்பாளா?" என்று அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் சொல்லிய போது அலமேலுவின் உள்ளம் பெருமையின் சிகரத்தைத் தொட்டது. பத்மாவுக்குச் சிறிதும் பெரிதுமாக மூன்று குழந்தைகள் இருந்தன.

அலமேலுவின் இரண்டாவது நாட்டுப் பெண் வனஜா. புக்ககம் வந்து ஒரு மாதம் கூட ஆகவில்லை. வனஜா பத்மாவைப் போல் நல்ல அழகிதான். ஆனால் குணத்திலோ நேர்மாறானவள் என்பது கூடிய சீக்கிரத்திலேயே தெரிய வந்தது. வனஜா ஐவேஜி உள்ள குடும்பத்துப் பெண்; படித்தவளும் கூட; பத்மாவைப் போல் அடக்க குணம் உள்ளவள் அல்ல. கலகலப்பாக எல்லோருடனும் பேசுவாள். சினிமா, சங்கீதம் முதலிய உல்லாசப் பொழுது போக்கில் மிகவும் விருப்பம் கொண்டவள். பத்மாவின் குழந்தைகளுடன் பேசிச் சிரித்துக் கொம்மாளமடித்துக் கொண்டிருப்பாளே தவிர, சமையல் அறைக்குள் நுழைய மாட்டாள். கடைக்குட்டிப் பையன் சேகரிடத்தில் அவளுக்கு அலாதிப் பிரியம். தான் எங்கு சென்றாலும் அவனையும் கூடவே அழைத்துப் போவாள்.

நாட்டுப் பெண்களுக்குச் சுதந்திரம் கொடுப்பதில் அலமேலுவுக்கு ஆசைதான். அவர்களை நசுக்கப் படுத்துவதில் அவளுக்கு இஷ்டமில்லை. ஆயினும் வனஜா, பத்மாவுக்கு உதவியாக வீட்டு வேலைகளைக் கவனிக்காமல் வெளியே செல்வதும், பக்கத்து வீட்டுப் பெண்களிடம் பேசிக் கொண்டிருப்பதும் அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, அவ்வப்பொழுது தன் அதிருப்தியை வனஜாவிடம் தெரிவித்துக்கொண்டாள். வனஜாவும் சிறிது நேரம் காரியங்களைக் கவனிப்பது போல் பாசாங்கு செய்வாளே தவிர, அவள் வெளிப் பிரயாணம் மட்டும் நிற்கவில்லை.

வனஜாவின் கணவன் சுந்தரம் ஒரு கல்லூரியில் போதகாசிரியராக இருந்தான். அவள் எவ்வளவு கலகலப்போ அவ்வளவு 'உம்' என்று இருப்பவன். தான் உண்டு தன் புஸ்தகங்கள் உண்டு என்று இருப்பவன். மனைவி

யைப் பற்றி அவனிடம் புகார் சொல்லி உபயோகம் இல்லை என்று அலமேலுவுக்குத் தெரியும். மேலும் அவனைப் பற்றிக் குறை கூறினால் குடும்பத்தின் அமைதி கெட்டு விடுமோ என்றும் அவள் பயந்தாள். ஆகவே நேருக்கு நேர் வனஜாவுக்குப் புத்திமதி சொல்வது மேல் என்று அவள் நினைத்தாள்.

மறுநாள் வனஜாவிடம் தன் அபிப்பிராயத்தை வெளிப் படையாகத் தெரிவித்தாள்.

"வனஜா, நீ வெளியில் போகும்பொழுது என்னிடம் ஒரு வார்த்தை சொல்லிக் கொண்டு போகக் கூடாதா?" என்றாள்.

நாட்டுப் பெண்ணின் முகத்தில் திகைப்போ கோபமோ ஏற்படவில்லை.

அவள் புன்சிரிப்புடன் "இல்லை அம்மா, அடுத்த வீட்டு லக்ஷ்மி திடீர் என்று வந்து கூப்பிட்டாள், 'சங்கீதக் கச்சேரிக்கு வந்தால் தான் ஆச்சு' என்று பிடிவாதம் செய்தாள். நான் என்ன செய்கிறது?" என்று கொஞ்சலாகச் சொன்னாள்.

"வீட்டில் வேலை செய்ய பத்மா இருக்கிறாள் என்ற தைரியம் தானே உனக்கு?"

வனஜா வளைந்து நெளிந்து கொண்டு "மன்னியே தான் என்னைப் போகச் சொன்னார் அம்மா!" என்று பதிலளித்தாள்.

இவ்வளவு இனிமையாகப் பதில் கூறும் பொழுது அலமேலுவுக்கு எப்படிக் கோபம் வரும்? அவளது புன் சிரிப்பில், இன்மொழியில் அலமேலுவின் கோபம் மாயமாய் மறைந்தது. வனஜா சாமர்த்தியக்காரி. எப்பேர்ப்பட்ட நெருக்கடியையும் சமாளிக்கும் பேச்சு வன்மை அவளுக்கு இருந்தது. அவள் அதிருப்திகரமாக நடந்து கொள்ளும் பொழுதெல்லாம் அலமேலுவின் கோபம் பத்மாமீது திரும்பி விடும்.



"பத்மா, நீ அவளுக்குக் கொடுக்கிற செல்லம்தான் இதற்குக் காரணம். நீ ஏன் அவளைக் கூப்பிட்டு வேலை வாங்கக் கூடாது?" என்பாள் அலமேலு அம்மாள்.

"சந்தோஷமாக இருக்க வேண்டிய வயதில் சந்தோஷமாக இருந்து விட்டுப் போகட்டுமே!" என்று பதிலளிப்பாள் பத்மா.

அப்பொழுதெல்லாம் பத்மாவுக்குப் புக்ககத்திலுள்ள தன் தங்கை கல்யாணியின் ஞாபகம் வந்தது. கல்யாணி புக்ககத்தில் தன் ஓரகத்தியிடம் பட்ட அவஸ்தைகளைத் தன் சகோதரியிடம் அடிக்கடி கூறி வந்தாள். "நான் கல்யாணியின் ஓரகத்தியைப்போல் இருக்க மாட்டேன். வனஜாவைச் சந்தோஷமாக வைத்துக் கொள்வேன்!" என்று பத்மா தீர்மானம் செய்து கொண்டாள்.

* * *

பத்மாவின் கணவன் ராஜாராமன் ஒரு ரெவின்யூ இன்ஸ்பெக்டர். மாதத்தில் இருபது நாட்கள் கிராமங்களுக்குக் 'காம்பில்' செல்வான். தப்பித் தவறி ஊரில் இருந்தாலும் கச்சேரி வேலை அவன் கவனத்தை ஆக்கிரமித்துக் கொள்ளும். வீட்டில் நடப்பது ஒன்றும் அவனுக்குத் தெரியாது.

ஒரு நாள் ராஜாராமன் வெளியூரிலிருந்து ஊருக்குத் திரும்பி வந்தான். "பத்மா!" என்று மனைவியைக் கூப்பிட்ட வண்ணம் வீட்டுக்குள் பிரவேசித்தான். கூடத்தில் வீணையை வைத்துப் பாடிக் கொண்டிருந்த வனஜா சட்டென்று எழுந்திருந்தாள். "அப்பா! அம்மா மாவு அரைத்துக் கொண்டிருக்கிறாள். இதோ கூப்பிடுகிறேன்" என்று கூறிக் கொண்டே உள்ளே ஓடினாள் அவன் பெண் ராஜி.

ராஜாராமன் இதயத்தை என்னவோ செய்தது. உள்ளே பாடுபடுவதோ தன் அருமை மனைவி; இங்கே பாடிக் கொண்டிருப்பதோ தன் தம்பி மனைவி. "இதோ வந்து விட்டேன்!" என்று தலைப்பால் துடைத்த வண்ணம் எதிரே புன் சிரிப்புடன் நிற்கும் பத்மாவைப் பார்த்தான். வியர்க்க விருவிருக்க வேலை செய்து களைத்துச் சோர்ந்த முகத்துடன் எதிரே நிற்கும் தன் மனைவியையும் உடம்பில் அழுக்குப்படாமல், புடவை மடிப்புக் கலையாமல் பொறுப்பின்றி உட்கார்ந்து பாடிக் கொண்டிருக்கும் வனஜாவையும் மாறி மாறிப் பார்த்தான் ராஜாராமன். கஷ்டப்பட்டுத் தன் கோபத்தை அடக்கிக் கொண்டான்.

அதிலிருந்து அவன் வீட்டில் நடப்பதைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினான். குடும்பத்துக்காகத் தன் மனைவி படும் பாடும், வனஜா சமையலறைக்குள் அடி எடுத்து வைக்காமல் உல்லாசமாகக் காலம் கழிப்பதும் அவனுக்குத் தெரிந்தது. அவன் மனத்தில் கோபமும் ஆத்திரமும் குடி புகுந்தது. வீட்டுக்குப் பெரியவளான அம்மா இந்த அக்கிரமத்தை எப்படி அனுமதித்திருக்கிறாள்? தன்னைவிடத் தம்பி சுந்தரம் சம்பாதிப்பது உண்மைதான். அதற்காக அவன் மனைவியை உட்கார்த்தி வைத்துத் தன் மனைவி உழைக்க வேண்டுமா? இதை எப்படித்தான் அவன் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

அன்று சுந்தரத்தின் நண்பர் ஒருவர் வெளியூருக்கு மாற்றப்பட்டார். அவருக்குச் சுந்தரம் தன் வீட்டில் விருந்து வைத்தான். சமையல் எல்லாம் பத்மாவின் திட்டம்தான். இரவு விருந்துக்குத் தடபுடலாக ஏற்பாடுசெய்தாள் அவள். அலுப்பின்றி, அயர்வின்றி அவள் பம்பரம்போல் சுழன்று வேலை செய்தாள்; பரிமாறினாள். தன் சமையலைப் பற்றி எல்லோரும் பாராட்டியபோது பத்மா அளவற்ற ஆனந்தம் அடைந்தாள்.

எல்லோரும் சந்தோஷத்தில் ஆழ்ந்திருந்த போது, ஒரே ஒருவர் உள்ளம் மட்டும் ஆத்திரத்தால் தீய்ந்து கொண்டிருந்தது. விருந்து முடிந்ததும் பத்மாவைத் தனிமையில் சந்தித்த ராஜாராமன் கண்கள் சிவக்க மனைவியைப் பார்த்து, "பத்மா! நீதான் இந்த வீட்டுக்குச் சமையல்காரியா? வனஜா எல்லோருடனும் உட்கார்ந்து விருந்து சாப்பிட்டுக் கொண்டிருக்க நீ பரிமாறும் கண்கொள்ளாக் காட்சியைப் பார்த்த பிறகும் நான் இந்த வீட்டிலிருக்கச் சம்மதிப்பேனா?" என்றான். பத்மாவுக்குத் தூக்கிப் போட்டது.

"நான்தான் வனஜாவைச் சாப்பிட உட்கார்ந்து கொள்ளச் சொன்னேன்!"

"இந்த வீட்டில் அதற்குக்கூட உனக்கு அதிகாரம் உண்டா? பத்மா! நான் இந்த ஊரிலிருந்து கூடிய சீக்கிரம் மாற்றிக் கொள்ளப் போகிறேன். நாம் போன பிறகு வனஜா சிம்மாசனத்திலிருந்து இறங்கி வந்து பாத்திரம் தேய்க்கிறாளா இல்லையா என்று பார்க்கிறேன்!" என்றான்.

"நன்றாயிருக்கிறது, வனஜாவிடம் கோபித்துக் கொண்டு ஊரை விட்டு ஓட வேண்டுமா? நாம் தனியாகப் போய்விட்டால் அம்மா என்ன கஷ்டப்படுவார்? வனஜாவுக்குக் காரியம் செய்யத் தெரியுமா?"

"அம்மாவை நாமும் கூட அழைத்துக் கொண்டு போய் விடுவோமே!"

"உங்கள் தம்பிக்குத் தனிக் குடித்தனம் செய்யத் தெரியுமா? அந்தப் பெண்ணுக்குத்தான் சமைக்கத் தெரியுமா? அம்மா அவர்களை விட்டு வரச் சம்மதிப்பாரா?" என்றெல்லாம் கேட்டாள்.

"வராவிட்டால் திண்டாடட்டும். அதற்காக நீ இந்த வீட்டில் வேலைக்காரியாக இருக்க நான் சம்மதிக்க மாட்டேன்" என்றான் ராஜாராமன்.

* * *

ஒருநாள் ராஜாராமன் தனக்கு மாற்றலாகி விட்டதாக அலமேலுவிடம் சொன்னபோது அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"ராஜா! பத்மா போய்விட்டால் இந்தக் குடும்பம் எப்படி நடக்கும்?" என்று திகைப்புடன் கேட்டாள்.

"கோபுரத்தைப் பொம்மைதான் தாங்குகிறதா? நடக்கிறதா இல்லையா என்றுதான் பாரேன்!" என்றான் ராஜாராமன்.

அலமேலு இடிந்து போய் உட்கார்ந்து விட்டாள். பத்மா இல்லாமல் வனஜா என்ன செய்வாள் என்பதை நினைக்கவும் அவள் வேதனையடைந்தாள். சுந்தரத்துக்குக் குடும்ப நிர்வாகம் எதுவுமே தெரியாது. எவ்வளவுதான் வேலைக்காரர்களை வைத்துக் கொண்டாலும் அவர்களை நிர்வகிக்க வனஜாவுக்குத் தெரியவேண்டாமா?

"அம்மா, நீயும் எங்கள் கூட வந்துவிடு!" என்றான் ராஜாராமன்.

"நானா? சுந்தரத்தைத் தத்தளிக்க விட்டு நான் வரமுடியுமா?" என்றாள் அலமேலு.

மாற்றலாகிப் போக வேண்டிய தினம்நெருங்கிக் கொண்டிருந்தது. மூட்டை





காட்டு வைத்தியர்:-இந்த மருந்தை பாதாம் ஹல்வா என்று நினைத்து விழுங்கிவிடு!

பையன்:-ஒண்ணு பண்ணுங்கோ. பாதாம் ஹல்வா கொண்டுவாங்கோ! மருந்து என்று நினைத்து 'லபக்' என்று விழுங்கி விடுகிறேன்!

மூடிச்சுக்கள் கட்டப்பட்டுக்கொண்டிருந்தன. பத்மாவின் முகத்தில் சோகமும் வேதனையும் குடி கொண்டிருந்தது.

"அக்கா, உங்களைப் பிரிந்து எப்படி இருப்பேன்?" என்று ஆயிரம் தடவை வனஜா பத்மாவிடம் சொன்னாள். குழந்தை சேகர் வனஜாவின் மடியில் உட்கார்ந்து அவள் முகவாய்க் கட்டையைப் பிடித்துப் பரிதாபமாக, "சித்தி, நான் போய் விட்டு வரட்டுமா?" என்ற மழலை மொழியில் கேட்டான். "போய்வாடா, கண்ணே! என்னை மறக்க மாட்டாயே!" என்று கேட்கும்பொழுது அலமேலுவின் முகத்தில் தோன்றிய வேதனையை எப்படி வர்ணிக்க முடியும்?

அன்று ஆபீஸிலிருந்து திரும்பிய ராஜாராமன் வாசலில் நின்று கொண்டு வண்டிக்காரனுடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தான். அப்பொழுது குழந்தை சேகரைக் கையில் பிடித்த வண்ணம் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்த பெண் ராஜி. "அப்பா! சேகர் உடம்பைத் தொட்டுப் பார்!" என்றாள் பரபரப்புடன். சட்டென்று ராஜாராமன் சேகரின் உடம்பில் கை வைத்துப் பார்த்தான். "ஐயோ! அனலாய்த் தகிக்கிறதே!" என்று கூவிய வண்ணம் குழந்தையை உள்ளே தூக்கிச் சென்றான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் டாக்டரும் வந்து பார்த்து மருந்து கொடுத்து விட்டுப் போனார். சேகருக்குக் கடுமையான காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தது. "சித்தி! என்னோடு நீயும் வந்து விடுகிறாயா? நான் உன்னை விட்டு விட்டுப் போகமாட்டேன்!" என்று சுர வேகத்தில் பிதற்றியதும், எல்லோருக்கும் தூக்கி வாரிப் போட்டது. காய்ச்சலின் காரணம் இது தானோ? வனஜாவால் கண்ணீரை அடக்க முடியவில்லை. "நானும் உன்னோடு வருகிறேன், கண்ணே! எனக்கு மட்டும் இங்கே என்ன வேலை?" என்று கூறிய போது கண்ணீர் பிரவாகமாய் வெளி வந்தது. அப்பொழுது பத்மா, ராஜாராமனைப் பார்த்த பார்வை, "உங்களால் வந்த வினையைப் பார்த்தீர்களா?" என்று அவனைக் குற்றம் சாட்டுவது போலிருந்தது.

தன்னைக் குடும்பத்தாரிடமிருந்து பிரித்துக் கொள்ளலாம். ஆனால் இளம் உள்ளத்திலிருந்து பாசத்தைப் பிரிக்க நினைத்தது எவ்வளவு பெரிய தவறு? அதைப் பிரிக்கத்தான் முடியுமோ! இந்த நிலையில் எப்படி ஊரை விட்டுக் கிளம்ப முடியும்?

அவன் கஷ்டத்தைப் புரிந்து கொண்ட அலமேலு "ராஜு! ஒருவாரம் லீவு எழுதிப் போட்டுவிடு!" என்று ஆலோசனை கூறினாள்.

"அப்படியே செய்கிறேன்!" என்றான் ராஜாராமன். ஒருவாரம் கழித்துத்தான் வேறு ஊருக்குப் போக வேண்டுமா? அப்பொழுதுதான் சேகர் வனஜாவை எப்படிப் பிரிந்திருப்பான்? வனஜாவையும் கூட அழைத்துப் போகலாமா? அல்லது எல்லோரையும் இங்கேயே விட்டு விட்டு வெளியூருக்குப் போய் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு இருக்கலாமா? ஏன் தான் மாற்றல் வாங்கிக் கொண்டோம் என்று வருந்தினான்.

இரவு முழுதும் கண்விழித்து, குழந்தையின் சிரத்தில் ஐஸ் பையை வைத்து சோகமே உருவாக உட்கார்ந்திருந்த வனஜாவைப் பார்த்ததும் அவன் உள்ளம் குருகுருத்தது. திகிலும் வேதனையும் நிரம்பிய இரவுப்பொழுது கழிந்தது.

ராஜாராமன் ஒருவாறு 'லீவ் லெட்டர்' எழுதி ஆபீசுக்கு அனுப்பிவைத்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் ஆபீஸிலிருந்து ஒரு சேவகன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தான். அதைப் படித்துப் பார்த்த ராஜாராமன் "பேஷ்! பிழைத்தேன்!" என்று கூவினான். "என்ன, என்ன?" என்று எல்லோரும் ஆவலுடன் கேட்டதும் "மாற்றல் உத்தரவு ரத்தாகி விட்டது! இந்த ஊரிலேயே நான் இருக்கப் போகிறேன்; இதே ஊரிலேயே தான்!" அளவு கடந்த ஆறுதலுடன் இந்த வார்த்தைகள் வெளிவந்தன. சேகர் கண்களை விழித்து "இங்கேயேதானா அப்பா!" என்றான்.

"ஆமாம்; இங்கேயேதான்" என்று ஏக காலத்தில் எல்லோரும் கூறியபோது அவர்கள் நா தழுதழுத்தது.

சில நாட்களுக்கெல்லாம் வனஜா குழந்தை சேகரின் கையைப் பிடித்தவாறு வெளியில் உலாவப் புறப்பட்டாள். அவசரமாக சமையல் அறையிலிருந்து வந்த பத்மா. "வனஜா, மாடு வந்து விட்டது! கொல்லைக் கதவைத் திறந்து விடுகிறாயா?" என்று கேட்டாள். அப்பொழுது ஆபீஸிலிருந்து வந்த ராஜாராமன், "வனஜா வேலையை, அவளே செய்யட்டும்! மூன்று குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதே ஒரு பெரிய வேலை என்பது இப்பொழுதல்லவா தெரிகிறது? நானே போய்க் கதவைத் திறக்கிறேனே!" என்றான். இந்தச் சம்பாஷணையைக் கேட்ட அலமேலுவின் முகம் மலர்ந்தது.



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 60. சந்தேக விளக்கம்

சென்ற 54 இலக்கமிட்ட கட்டுரையாகிய சந்தேக விளக்கத்தில் "சர்வாங்காசனம் மட்டும் அரைமணி நேரம் வரை செய்யலாம். அதனால் நன்மையே தவிரத் தீமை ஒரு போதும் ஏற்படாது. அதற்கு மேல் அதிக நேரம் செய்ய வேண்டிய அவசியமில்லை. இல்லறத்தார்கள் செய்யவும் கூடாது" என்று எழுதி இருப்பதற்காக, சில அன்பர்களுக்குச் சந்தேகம் தோன்றிக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள் பின் வருமாறு :—

கேள்வி :—'இல்லறத்தார்கள் செய்யவும் கூடாது' என்று எழுதியிருக்கிறீர்களே! இத்தனை நாள் இல்லறத்திலுள்ளவர்கள் எல்லோரும் செய்யலாம், எல்லா வயதினரும் செய்யலாம் என்று சொல்லிக்கொண்டு வந்து, இப்பொழுது திடீரென்று செய்யக் கூடாது என்று எழுதியிருக்கிறீர்கள். நாங்கள் நெடுநாளாகத் தங்கள் உபதேசப்படி ஆண், பெண் எல்லோரும் செய்து சில நன்மைகளும் அடைந்திருக்கிறோம். அப்படியிருக்க இப்பொழுது திடீரென்று இல்லறத்தார்கள் செய்யவும் கூடாது என்றால் எங்களுக்கு ஒரே மலைப்பாய் இருக்கிறது. மேற்கொண்டு செய்வதா, வேண்டாமா என்று தெரியாமல் திகைக்கிறோம். ஆகையால் அடுத்து வரும் சந்தேக விளக்கத்திலேயே தயவு செய்து எங்கள் சந்தேகங்களுக்குப் பதில் கூறும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

பதில் :—நியாயமான கேள்விதான். அம்மாதிரி தப்பர்த்தம் உண்டாக்கும்படியான நிலைமை ஏற்பட்டதற்கு மிகவும் வருந்துகிறேன். 'இல்லறத்தார்கள் அரைமணி நேரத்திற்கு மேல் செய்ய வேண்டிய அவசியமில்லை' என்று எழுதியிருந்தால், இம்மாதிரி தப்பர்த்தங்களுக்கு இடமே இல்லை. ஆனால் அந்த ஒரு வாக்கியத்தை "இல்லறத்தார்கள் செய்யவும் கூடாது" என்பதை மட்டும் வைத்துக் கொண்டு பார்த்திருக்கிறார். அதற்கு முன்பாக வந்துள்ள வாக்கியங்களைச் சரியாய்ப் பார்க்கவில்லை என்று தோன்றுகிறது. சர்வாங்காசனத்தை அரை மணி நேரம் வரை செய்யலாம். அதற்குமேல் அதிக நேரம் செய்யவேண்டிய அவசியமில்லை. இல்லறத்தார்கள் செய்யவும் கூடாது என்பதில் அந்த அரை மணி நேரம் வரை செய்யலாம், அதற்கு மேல் இல்லறத்தார்கள் அதிக நேரம் வரை செய்யவும் கூடாது என்பது தொக்கி நிற்பதை அறிந்து கொள்ளலாம்.

கேள்வி :—நாங்கள் மாடியில் குடியிருக்கிறோம். மாடியின்மேல் சர்வாங்காசனம் செய்தால் தைராய்ட்டிற்குப் பலன் ஏற்படுமா? மாடி ஆனதினால் பூமியின் ஆகர்ஷண சக்தி இல்லாமல் இருக்குமா? அல்லது கீழ் பாகத்தில்தான் செய்ய வேண்டுமா?

பதில் :—மாடியிலும் பூமியின் ஆகர்ஷண சக்தி உண்டு. ஒரு மாடியில் மட்டுமல்ல பல நூற்றுக்கணக்கான மாடிகளைக் கொண்ட அமெரிக்கா கட்டிடங்களைப் போன்ற மாடிகளிலும் ஆகர்ஷண சக்தி உண்டு. பூமியின் மேல் மட்டுமல்ல ஆகாய விமானங்களிலும் ஆகர்ஷண சக்தி உண்டு. ஆகாயத்தில் பல மைல்கள் தூரம் ஆகர்ஷண சக்தி உண்டு. ஆகையால் பேஷாக மாடிகளில் செய்யலாம்.

கேள்வி :—திறந்த வெளிகளில், மாடி மொட்டைகளில் ஆசனப் பயிற்சி செய்யலாமா?

பதில் :—செய்யலாம். ஆனால் பனியாய் இருக்கும்போது செய்யக் கூடாது. உடலின் மேல் வெய்யில் படும்படியாகச் செய்யக் கூடாது. இளம் வெய்யிலாக இருந்தால்



ஏ:—முன்னெல்லாம் இந்த இடத்திலே வெறும் ஒற்றையடிப் பாதை மட்டும் இருந்தது. இப்பொழுது எவ்வளவு மாறுதல் பார்த்தாயோ?



வீட்டு எஜமானி:—உன்னிடம் இதைச் சொல்லித்தான் ஆகணும். உன் சமையல் நன்றாகவே இல்லை என்று என் கணவர் தினமும் புகார் சொல்லிக் கொண்டே இருக்கிறார்! இதற்கு என்ன பண்ணுவேன்....?

சமையல்காரி:—அதை மனசிலே வைத்துக் கொண்டு வருத்தப்படாதீர்கள்! உம்...எல்லாருக்கும் நல்ல கணவராக வாய்த்து விடுகிறாரா?

---

பரவாயில்லை. அதனால் நன்மையே. உக்கிரமான வெய்யிலாய் இருக்கக் கூடாது.

**கேள்வி:**—நான் சர்வாங்காசனத்தைச் சில மாதங்களாகச் செய்து வருகிறேன். அதனால் எனக்குள்ள சில குறைகளும் நீங்கிவிட்டன. முன்பை விட நன்றாய், சுகமாய் சுறுசுறுப்பாய் இருக்கிறேன் என்பதை மன மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆனால் சில நாளாக என் கை கண்டு விரல் மதமதப்பாகவும் உணர்ச்சி குறைந்துமிருக்கிறது. காரணம் என்ன? அப்படியிருந்தும் சர்வாங்காசனத்தை நான் விடவில்லை. அது தான் எனக்கு விமோசனமளித்ததால் அதை விடாமல் செய்து வருகிறேன். அதை விட வேண்டுமென்றாலும் மனம் வர மாட்டேன் என்கிறது. ஆகையால் தயவு செய்து இதற்குப் பரிகாரம் கூறவேண்டும்.

**பதில்:**—இம்மாதிரி இன்னும் இருவருக்கு ஏற்பட்டிருப்பதாகக் கடிதம் வந்திருக்கிறது. அப்படி ஏற்படுவதற்குக் காரணம்; அவர்கள் அதிகமாகத் தங்கள் உடலின் பளுவைக் கைகளின் மேல் தாங்கிக்கொண்டு சர்வாங்காசனத்தைச் செய்வதினால் தான் என்று நினைக்கிறேன். அப்படி எல்லோருக்கும் நேரவில்லை, ஏதோ ஒரு சிலருக்குத்தான் அம்மாதிரி ஏற்பட்டிருக்கிறது. அவர்களது கை கண்டு விரல்களின் நரம்பு, சர்வாங்காசனத்தை செய்யும்போது தாங்கிக் கொள்ளும் கை முட்டிகளின் அடியில் ஒரு கால் ஓடியிருக்கலாம். சரீர அமைப்பில் அபூர்வமாய் ஒரு சிலருக்கு அம்மாதிரியும் இருப்பது சகஜம் தான். அப்படியில்லை யென்றால் எல்லோருக்கும் அம்மாதிரி நேர வேண்டுமே! எப்பொழுது அப்படி எல்லோருக்கும் இல்லையோ ஒரு சிலருக்குத்தான், நரம்பு தாங்குகிறது என்று ஏற்படுகிறது அப்பேர்ப்பட்டவர்கள் அதிகமாகக் கைகளில் மேல் சரீர பளுவைத் தாங்கும்படி செய்யாமல் லேசாய்ப் பிடித்துக் கொண்டால் சரியாய் விடும். அப்படியும் விரல்களின் நரம்புகள் உறுத்துகின்றதென்றால், முதுகின் அடியில், மூன்று நான்கு தலையணைகளைச் சேர்த்து ஒரு படுக்கைச் சுருணைப் போல கட்டித் தாங்கச் செய்து, கைகளால் அந்தப் படுக்கையை நழுவி விடாமல் பிடித்துக் கொள்ளலாம்

சாதாரணமாகச் சர்வாங்காசனம் செய்பவர்கள் எப்பொழுதும் கைகளை அதிகம் தாங்கிப் பிடித்துக் கொள்ளக் கூடாது. சர்வாங்காசன சித்திரத்திலுள்ளபடியே கால்களை நேராய்க் கொண்டு வந்து செய்ய வேண்டுமானால், சிலருக்குக் கைகளால் அதிகம் தாங்கிக் கொண்டால்தான் முடியும். அப்படிச் செய்வதால் சிலருக்கு உள்ளங்கைகள் திமிர் பிடித்து விடும். ஆகையால் கால்கள் சற்றுப் பின்புறம் சென்றாலும் பரவாயில்லை. கைகளுக்குச் சிரமமில்லாமல் அதிக நேரம் நிற்கப் பழக வேண்டும். இதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது என்ன வென்றால், முகவாய்க்கட்டை மார்பில் ஒட்டியிருக்க வேண்டும். அவ்வளவுதான். கால்களைப் பற்றி அதிகம் கவலை கொள்ளக் கூடாது. இன்றே படத்திலுள்ள நிலையைப்போலச் செய்துவிட வேண்டும் என்று முயற்சிக்கவும் கூடாது.

**கேள்வி:**—சர்வாங்காசனம் செய்யும்போது கைகள் முதுகுப் புறத்தை அமுக்கி, தாங்கிப் பிடிப்பதால், அந்த இடத்தில் ரத்தோட்டம் தடைப் பட்டுத் தேங்கி விடாதா?

**பதில்:**—இதற்கு முன் வந்த கேள்வியின் பதிலே இதற்கும் தகும். கைகளால் அதிகம் தாங்கக் கூடாது. சர்வாங்காசனம் சரியாய்ச் செய்கிறோம் என்பதற்கு அடையாளம் என்ன வென்றால், இடுப்பிலிருந்து கைகளை எடுத்து விட்டாலும் உடல் முன்போல அதே நிலையில் நிற்க வேண்டும். அப்பொழுதுதான் கைகள் உதவி அதிகம் இல்லாமல் லேசாய்ப் பிடித்துக் கொள்ள முடியும்.

**கேள்வி:**—கர்ப்ப ஸ்திரீகள் சர்வாங்காசனத்தை எத்தனை மாதம் வரை பழகலாம்?

**பதில்:**—புதிதாய் ஆரம்பிக்கிறவர்கள் கர்ப்பம் என்று தெரிந்தாலே எந்த ஆசனத்தையும் செய்யவே கூடாது. வழக்கமாய் செய்து கொண்டு வருபவர்கள் கர்ப்பமானால் 3 மாதங்கள் வரைக்கும்தான் சர்வாங்காசனத்தைச் செய்யலாம். அதற்கு மேல் செய்யக்கூடாது. அப்படி கர்ப்பமானவர் புதிதாய் செய்ய விரும்பினால் 4, 5 மாதங்கள் வரை மட்டும் பத்மாசனம் மாத்திரம் செய்து பழகி வரலாம். (தொடரும்)



# ஒவ்வொன்றிலும்

# டெஸ்லா முன்னணியில் இருக்கிறது

TESLA

விளையாட்டிற்கேற்ற காலம் இதே. விறுவிறுப்பான விளையாட்டுக்களின் விமர்சனங்கள் அருகிலிருந்தும், தொலைவிலிருந்தும் வானில் ஒலிபரப்பப் படுகின்றன. உங்களுக்கு வேறென்ன தேவை...எந்த நிகழ்ச்சிகளையும் மிகத் தெளிவாகக் கிரகிக்கும் சக்தியுள்ளது ஓர் அழகிய டெஸ்லா ரேடியோவே. வீட்டில் குதூகலமாகக் காலம் கழிப்பதற்கு இதற்கு இணை வேறில்லை.

மதிப்பு வாய்ந்த டெஸ்லாவின் சில




| | | |
|---|---|---|
| டெஸ்லா சிம்போனி | ரூ. | 480/- |
| டெஸ்லா ஏரி | ரூ. | 390/- |
| டெஸ்லா பயோனீர் | ரூ. | 375/- |
| டெஸ்லா டாலிஸ்மான் | ரூ. | 235/- |

ஹைதராபாத் உள்பட தென்னிந்தியாவிற்கு பூரண வினியோகஸ்தர்கள் :

**ஓபுல் ரெட்டி (மதராஸ்) லிமிடெட்**

புருஷோத்தம் பில்டிங் - மவுண்ட் ரோடு - மதராஸ்-2

# நவம்பர் 28 முதல்



ராயல்

# சுதர்சன் தமிழ்

சின்னப்பா, கண்ணாம்பா, பாலையா மற்றும் பலர்

யோகமங்களம், லலிதா

டைரக்ஷன்
சுந்தர்ராவ் நட்கர்னி
A.S.A. சாமி

கதை & வசனம்
இளங்கோவன்..A.S.A.சாமி



சென்ட்ரல்
வாஹினி

சென்னை...
காஸினோ பிராட்வே
ஸரஸ்வதி...
மற்றும் தமிழ் நாடெங்கும்.



ராயல் டாக்கி டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்
மதுரை விஜயவாடா

# ராஜாளி மடம்

கி.ரா. கோபாலன்

ரா

## 1. அவளைத் தொடாதே......!

மரணம் அவளை அழைத்துக் கொண்டிருந்தது! அவளும் அதை நோக்கித்தான் சென்று கொண்டிருந்தாள். படுத்த படுக்கையில் கிடந்த அவளுடைய ஒவ்வொரு மூச்சிலும் எதுவும் கடைசி மூச்சாகலாம். ஆம்! சாரதா மரணப் படுக்கையில் தான் கிடந்தாள். உலகோடு ஒட்டாத, தனிமையான பயங்கரம் சூழ்ந்த அந்தப் பெரிய கட்டிடத்தின் மாடியில் எங்கோ ஒரு மூலை அறையில் அவளுடைய உயிர் உடலை விட்டுப் பிரியப் போராடிக் கொண்டிருந்தது.

அந்த அறையில் கட்டிலில் விரிக்கப்பட்டிருந்த மெத்தையில் அவள் உடல் கிடத்தப் பட்டிருந்தது. சுவரில் மாட்டப்பட்டிருந்த சிம்னி விளக்கின் மங்கிய மஞ்சள் நிற ஒளியில் அந்த அறையிலிருந்த ஒவ்வொரு பொருளின் நிழலும் அவள் உயிரைக்கொண்டு செல்ல வந்திருக்கும் எமதூதர்களின் பயங்கர நிழல்போல்தான் இருந்தது.

அந்தப் படுக்கைக்கு அருகில் சாரதாவின் சகோதரி மரகதம் அசையாமல் கன்னத்தில் கை ஊன்றிய வண்ணம் சிலைபோல் அமர்ந்திருந்தாள். நிலையான பார்வையோடு கூடிய அவளுடைய கடுமையான கண்கள் துணிவோடும் தைரியத்தோடும் தன் சகோதரியின் மரணத் தருவாயை எதிர்பார்ப்பது போல் இருந்தது. அவள் கண்களில் இரக்கமோ, துக்கமோ எதுவுமில்லை. அன்புடனோ, பிரிவாற்றாமையின் துயருடனோ ஜீவ களையிழந்து மரணப் படுக்கையில் கிடக்கும் தன் சகோதரியின் முகத்தை அவள் பார்க்கவில்லை. தன்னோடு நாற்பது வருடமாக ஒன்றாக வாழ்ந்த தன் சகோதரியின் அந்திய காலம் நெருங்கி விட்டதை எண்ணி அவள் பதைக்கவில்லை. பரிதாபம், அன்பு, ஆசை, வாஞ்சை, பாசம், இரக்கம் ஒன்றும் அப்பொழுது அவள் மனதை அசைக்கவில்லை. இத்தகைய உணர்ச்சிகளெல்லாம் நெடு நாட்களுக்கு முன்பே மரகதத்தின் இருதயத்திலிருந்து விடை பெற்றுக் கொள்ளாமலேயே போய்விட்டன போலும். ஏன்! அன்பு, ஆசை, பாசம், இரக்கம் போன்ற வார்த்தைகளை அவள் செவிகள் கேட்டே நெடு நாட்களாகி இருக்கும் போலிருந்தது.

மரகதத்திற்கு இரண்டடி தள்ளினாற்போல் கட்டிலுக்குச் சமீபமாக டாக்டர் நின்றுகொண்டிருந்தார். டாக்டருக்கு வயது அவ்வளவு அதிகமாக மதிப்பிட முடியாது. புதிதாகத் தொழில் ஆரம்பித்திருக்கும் அனுபவமில்லாத இளைஞர் தான். அவருக்குச் சுமார் இருபத்தைந்து வயது தான் இருக்கலாம். இளைஞராய் இருந்தாலும் அவர் முகத்திலும், கண்களிலும் அறிவும் தெளிவும் சுடர்விட்டுப் பிரகாசித்தன.

அவர் அங்கு வந்து சில மணி நேரங்கூட இருக்காது. அந்த ஊருக்குச் சமீபமாக உள்ள நந்தி துர்க்கம் என்னும் கிராமத்திலுள்ள அரசாங்க ஆஸ்பத்திரியின் டாக்டர் அவர். இப்பொழுதுதான் சொக்கி குளம் கிராமத்திலுள்ள ராஜாளி மடம் என்ற அந்தக் கட்டிடத்திற்கு அவர் முதன் முதலாக விஜயம் செய்திருக்கிறார்.

டாக்டர் பரகராம் ராஜாளி மடத்தைப் பற்றி அனேகர் சொல்லிய விநோதமான கதைகளையெல்லாம் கேட்டிருக்கிறார். இந்த உலகத்திலேயே மற்ற மனிதர்களின் வாசனை படாமலேயே யாரோ ஒரு சிலர் வசிப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறார். அந்தக் கட்டிடத்தின் பூர்விக சரித்திரம் ஒருவருக்கும் அதிகமாகத் தெரியாது.



"ரகுபதி கார் வாங்கியிருக்கிறார், பார்த்திருக்கிறாயா? அது பழைய காராயிருந்தாலும் ரிப்பேருக்காகக் காலணா கூட அவர் செலவழிக்க வில்லையாமே!"

"ஆமாம் அந்தக் காரை ரிப்பேர் செய்தவன் கூட அப்படித்தான் சொன்னான். ரகுபதி காலணா கூடக் கொடுக்காமல் அவனை ஏமாற்றி விட்டாராம்!"

ஆனால் பத்துப் பன்னிரண்டு வருட காலமாக அந்தக் கட்டிடத்தில் தனிமையில் மூன்று ஸ்திரீகள் வசிப்பதாகப் பாரம்பரியமாகக் கேள்விப்பட்டிருக்கிறார். அந்தக் கட்டிடத்தைச் சுற்றியுள்ள பெரிய கோட்டை போன்ற மதில் சுவரைத் தாண்டி உள்ளே ஒருவருமே வந்ததில்லை. முன் வாசற்படியிலுள்ள பெரிய இரும்புக் கதவு எப்பொழுதுமே மூடப் பட்டிருக்கும். அந்த வீட்டில் ஊழியம் செய்யும் வயதான வேலைக்காரியைத் தவிர மற்றவர்களை எவரும் பார்த்ததே யில்லை. செங்கம்மா என்ற அந்த வேலைக்காரிதான் அந்த வீட்டிற்கு வேண்டிய ஒவ்வொரு பொருளையும் வெளியே சென்று வாங்கி வருவாள். அவளைத் தவிர அந்தக் கட்டிடத்திலுள்ள மற்ற மூன்று பெண்களும் வெளியே தலை நீட்டியதே கிடையாது. அவர்கள் முகத்தை எவரும் பார்த்ததாகச் சொல்லியதே கிடையாது.

அந்தக் கட்டிடத்தில் அழகே உருவான ஒரு இளநங்கை இருப்பதாகவும், அவளுக்குப் பைத்தியமென்றும் சிலர் சொல்லுவார்கள். இன்னும் சிலர் அந்தப் பெண் ஊமை என்றும் சொல்லுவார்கள். இன்னும் சிலர் இந்த இரண்டையும் மறுத்து அங்குள்ள இளம் பெண்ணுக்குப் பைத்தியமில்லையென்றும் வயதான ஸ்திரீ ஒருத்திக்குத் தான் பைத்தியமென்றும் சொல்லிக் கொள்வார்கள். உண்மை எப்படியோ! ஊர் வதந்தி பலவிதமாக இருந்தது. பன்னிரண்டு வருட காலமாக அந்த ராஜாளி மடத்தில் வசிக்கும் அதிசயப் பிறவிகள் வெகு ஜாக்கிரதையாகத் தான் தங்கள் ரகசியத்தைக் காப்பாற்றி வந்தனர்.

வெளியுலகில் பழகி வந்த வேலைக்காரி செங்கம்மாவிற்கு வயது நாற்பதுக்கு மேலிருக்கும். உயரமான உருவம், நல்ல தேக ஆகிருதி. அரை ஆண் பிள்ளை என்று அவளைப் பார்த்தவுடனேயே நிர்ணயித்து விடலாம். அவள் முகத்தில் ஓர் கண்டிப்பும், எவரும் விரும்பாத குரூரப் பார்வையும் தான் நிரம்பி இருக்கும். பொதுவாக அவள் எல்லோருடைய கண்களுக்கும் கொடுமையான ஏதோ ஒரு ரகசியத்தை மனதிற்குள் அழுத்தி வைத்திருப்பது போல்தான் தோன்றும். பொதுவாகப் பெண்ணாயிருந்தாலும் அவள் ஒரு பயங்கரமான பிரகிருதி. சந்தையிலும், கடைகளிலும் அவள் சாமான்கள் வாங்கும் பொழுது ராஜாளி மடத்தைப் பற்றிய ரகசியம் ஏதேனும் அவள் வார்த்தைகளிடையே தெறித்து விழுந்து விடாதா என்று அநேகர் எதிர்பார்ப்பதுண்டு. ஆனால் அவள் அப்படி ஏமாந்ததே இல்லை. ஒவ்வொரு வார்த்தையையும் நிதானித்துக் கண்டிப்பாகவே தான் பேசுவாள். எப்பொழுதுமே அவளிடம் சரளமான சுபாவம் இல்லாததால் அவளிடம் எதையும் துணிந்து கிளறிக் கேட்கும் தைரியம் ஒருவருக்கும் இல்லை.

தனிமையாக அந்த வீட்டில் வசிக்கும் அந்த விநோதமான ஸ்திரீகளை நினைக்க டாக்டர் பரசுராமனுக்கு ஆச்சரியமாய்த் தானிருந்தது. மனித வாசனையிலிருந்தே ஒதுங்கித் தனிமையான அந்தக் கட்டிடத்திலிருந்து கொண்டு உயிர் வாழ நினைக்கும் அந்த ஸ்திரீகளை நினைத்தால் அவருக்குச் சற்று வியப்பாகவும் பரிதாபகரமாகவும் தானிருந்தது. 'ஏன் அவர்கள் இந்த உலகத்திலிருந்தே விலகி நின்று வாழ விரும்புகிறார்கள்' என்பதே அவருக்கு அதிசயமாக இருந்தது. அதற்கு ஏதோ காரண மிருக்கத்தான் வேண்டும் என்று அவர் ஒரு முடிவுக்கு வந்தார். இங்கே ஒரு அழகான இளம் பெண் இருக்கிறாள். அவளுக்குப் பைத்தியம் என்று ஜனங்கள் சொல்லிக் கொள்வார்களே! அந்தப் பெண் எங்கே! அப்படி ஒரு பெண் இருந்தால் இது வரையில் என் கண்ணிலேயே படவில்லையே! உண்மையாகவே அவள் பைத்தியம் பிடித்தவளாக இருப்பாளா! என்ற யோசனை தான் அப்பொழுது டாக்டரின் சிந்தனையில் உழன்று கொண்டிருந்தது. அவர் பார்வை எதையோ துருவிப் பார்ப்பது போலிருந்தது.

மரகதம் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு ''இனி மேல் இவள் பிழைக்க மாட்டாள். இல்லையா டாக்டர்!'' என்றாள் அழுத்தமான குரலில்.

டாக்டர் அவளுடைய முகத்தை உற்றுப் பார்த்தார். அதில் எவ்விதமான மாறுதலும் இல்லை. அவளுடைய வார்த்தைகள் கடுமையாக இருந்ததே தவிர அதில் ஒரு இரக்கம் இல்லை. "ஆமாம்! இனிமேல் நம்பிக்கைக்கு இடமில்லை. என்னை நீங்கள் ஆரம்பத்திலேயே அழைத்திருந்தால் ஒரு வேளை...'' டாக்டர் தன் வார்த்தையைச் சொல்லி முடிப்பதற்குள் மரகதம் அவரை இடைமறித்து ''அது சரி! நீங்கள் அவளை இப்பொழுது பிழைக்க வைத்து விட முடியுமா என்று நான் கேட்கவில்லை. இவளைப் போல் துரதிருஷ்டம் பிடித்தவள் இருப்பதை விடச் சாவதே மேல். போகட்டும். இன்னும் எவ்வளவு நேரம் தாங்கும்!'' என்றாள் வெறுப்பு நிறைந்த குரலில்.

''அதிக நேரம் தாங்காது. எப்பொழுது வேண்டுமானாலும் நேரலாம்'' என்றார் டாக்டர் எங்கேயோ பார்வையைச் செலுத்திக் கொண்டே.

படுக்கையில் கிடந்த சாரதா சிறிது அசைந்து கொடுத்து முனகினாள். மரகதம் உரத்த அதிகார தொனியில், ''செங்கம்மா! செங்கம்மா!'' என்று



கூப்பிட்டாள். அடுத்த கணத்தில் அவள் எதிரில் வேலைக்காரி செங்கம்மா வந்து நின்ருள். நல்ல பருமனும் உயரமுமான அவள் உருவம் பாதி இருள் சூழ்ந்திருந்த அந்த அறையில் ஏதோ பேயோ பூதமோ வந்து நிற்பது போல் தானிருந்தது.

"உடனே போய் வேதாவை இங்கே அழைத்துக் கொண்டு வா" என்ருள் மரகதம். செங்கம்மா எதுவும் பதில் சொல்லாமல் நடந்தாள், இருளில் பேய் நடந்து போவது போல.

'வேதா' என்ற பெயரைக் கேட்டதுமே டாக்டர் பரசுராமனின் உள்ளத்தில் ஒருவிதமான ஆவலும் கிளர்ச்சியும் ஏற்பட்டது. அந்த வீட்டிலிருக்கும் அதிசயமான, அழகான, இளம் வயதுப் பெண் அவளாகத் தானிருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. மரணப் படுக்கையிலிருக்கும் சாரதாவும் அவள் சகோதரி மரகதமும் நாற்பது வயதிற்கு மேலானவர்கள். இவர்களைத் தான் அவர் பார்த்து விட்டாரே. இவர்களைத் தவிர இன்னொரு பெண்ணுமிருக்கிருள். அவளைத் தான் இப்பொழுது வேலைக்காரி செங்கம்மா அழைத்து வரப் போயிருக்கிருள். அவள் தான் ஊரில் ஊமையென்றும் பைத்திய மென்றும் ஜனங்கள் பேசிக் கொண்டிருக்கும் பெண்ணுக இருக்க வேண்டும் என்று அவர் மனது திடமாக எண்ணியது. அந்தப் பெண்ணின் வருகையை அவர் ஆவலுடன் எதிர்பார்ப்பதை அவர் கண்களிலிருந்த பரபரப்பு நன்கு விளக்கியது.

வெளியுலகத்தில் அனேகர் சொல்வது போல் அந்தப் பெண் மிகுந்த அழகியோ, இல்லையோ! அவள் பைத்தியம் பிடித்தவளா அல்லது சரியான



நிலையிலுள்ளவளா என்பதெல்லாம் கூடிய சீக்கிரம் அவருக்குப் புலனுகிவிடும். அவர்தானே முதன் முதலாக அந்தப் பெண்ணை நெருங்கிப் பார்க்கும் வெளி மனிதர்களில் ஒருவர்!

மரகதம் சிலை போல் உட்கார்ந்திருந்தாள். டாக்டர் அந்த அறையின் வெளிப் பக்கமே தன் பார்வையைச் செலுத்திய வண்ணம் நின்று கொண்டிருந்தார். திடீரென்று அவருடைய பார்வையை ஒரு பரிதாபமான முனகல் சத்தம் திருப்பியது. சாவோடு போராடிக் கொண்டிருந்த சாரதா தான் அப்படி முனகியவள். அவள் தன் கண்களை அகல விழித்து யாரையோ தேடுவது போல் நான்குபுறமும் பார்த்தாள். பாவம்! என்ன ஏமாற்றம்! அவள் தேடுகிற ஜீவன் அங்கே இருந்தால் தானே! அவள் தன் படுக்கைக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் மரகதத்தின் கடுமையான முகத்தைப் பரிதாபத்தோடு பார்த்தாள். வெளுத்து உலர்ந்திருந்த அவளுடைய அதரங்கள் பேசுவதற்காக அசைந்தன. "வேதா" என்ற வார்த்தை ஈனஸ்வரத்தோடு கூடியதாய் இருந்தாலும் அவள் நெஞ்சின் அடித்தளத்திலிருந்து எழும்பிய வார்த்தையைப் போல் தானிருந்தது.

"வேதாவா... இதோ வருவாள். அவளை அழைத்துக் கொண்டு வரச் சொல்லியிருக்கிறேன்" என்ருள் மரகதம் சிறிது இளகிய குரலில்.

"மரகதம்...இதைக் கொஞ்சம் கேளு. நாம் ரொம்பத் தவருன காரியமெல்லாம் செய்து விட்டோம். கடவுள் கடைசிக் காலத்தில் தான் எனக்குப் புத்தியைக் கொடுத்திருக்கிருர். இந்தப் பிடிவாதத்தினுல் எந்த விதமான சந்தோஷமும் இல்லை என்று இப்பொழுது தான் எனக்குத் தெரிகிறது. இதற்கு வேதாவும் பலியாக வேண்டாம்..." என்ருள் சாவுப் படுக்கையில் கிடந்த சாரதா ஈனமான குரலில். அவள் சொல்லிய வார்த்தைகள் ஒவ்வொன்றும் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிக் கொண்டு வந்த அவளுடைய ஆவியின் கடைசி மூச்சின் தெம்பிலிருந்து கிளம்பிய துணிகரமான வார்த்தைகளாகத் தானிருந்தன.

இதைக் கேட்டதும் மரகதத்தின் கண்கள் கோபத்தால் விரிந்தன. அவள் பல்லைக் கடித்துக் கொண்டு எரித்து விடுவது போல் சாவோடு போராடிக் கொண்டிருக்கும் தன் சகோதரியைப் பார்த்து விட்டு ஒரு பெருமூச்சு விட்டாள். ஆனால் அவள் எவ்விதமான வார்த்தையும் பேசவில்லை.

"மரகதம்! மரகதம்! அவளை விட்டுவிடு. அவளை விட்டுவிடு. அவளையும் அடைத்து வைத்துச் சாக விடாதே. அவளை விட்டுவிடு. அவளுக்கு எவ்வித மான ஆபத்தும் வராது. கடவுள் இருக்கிருர்....!" என்ருள் சாரதா பதற்றத்துடன் கெஞ்சும் குரலில்.

டாக்டர் பரசுராமனின் செவியிலும் இந்த வார்த்தைகள் விழுந்தன. அவர் மரகதத்தின் முகத்தைப் பார்த்தார். அவள் தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள். அவள் முகத்தில் முன்பு இருந்த கடுமையில்லை. அவள் முகம் சட்டென்று வாட்டமடைந்தது. கணப் பொழுதிற்குள் நெருப்புத் துண்டு போல இருந்த அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் துளிர்த்துக் கன்னங்களில் வழிந்தோடின. அவள் தன் புடவைத் தலைப்பால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அப்பொழுது அந்த அறையின் வாசற்படிக்கும் சமீபமாக ஏதோ சப்தம் கேட்டது. அப்பொழுது தான் டாக்டர் ஆவலோடு தன் பார்வையை அந்தப் பக்கம் செலுத்தினுர்.

கதவுக்குப் பக்கத்தில் வேலைக்காரி செங்கம்மாவும் ஒரு பெண்ணும் நின்று கொண்டிருந்தனர்.

## குடையின் உபயோகம்!







டாக்டரின் கண்கள் வேலைக்காரியைக் கவனிக்கவே யில்லை. அவருடைய பார்வை முழுவதையும் அவளுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த அந்தப் பெண் இழுத்துக் கொண்டு விட்டாள்.

வேலைக்காரிக்குப் பின்னால் அந்தப் பெண் கைதி போல் அடக்கத்தோடும் பயத்தோடும் நடந்து வந்தாள். மங்கலாக எரிந்து கொண்டிருந்த சிம்னியின் மஞ்சள் ஒளி முழுவதும் அந்தப் பெண்ணின் மீது விழுந்தது. அவளுக்குப் பதினறு அல்லது பதினேழு வயதிற்கு மேல்மதிப்பிட முடியாது. அவளுடைய கருத்த நீண்ட தலைக்கேசம் பின்னி விடப்பட்டிருந்தாலும் அவளுடைய கேசம் நெற்றி முகட்டிலும் தோளிலும் சுருண்டு பிரெம் பிரெமாக விழுந்திருந்தது. அவளுடைய நீண்ட அழகான கண்களில் பேதமையும் பயமும் கலந்திருந்தது. சூரியனின் ஒளி படாத குகை அருகில் மலர்ந்த தனித் தாமரையை யாரேனும் பார்த்ததுண்டா! அவளைப் பார்த்தவுடன் டாக்டர் பரசுராமனுக்குச் சூரியனின் ஒளியே படாத குகை அருகில் மலர்ந்த தனித் தாமரையைப் பார்ப்பது போல் தானிருந்தது.

மரகதம் எழுந்திருந்து மெதுவாக அவள் தோளைத் தொட்டு "இங்கே வா" என்று படுக்கைக்குச் சமீபமாக அழைத்து வந்தாள்.

டாக்டருக்கு அந்தப் பெண்ணைப் பார்க்கப் பார்க்க நிலை தடுமாறுவதாய் இருந்தது. அந்தப் பெண்ணின் மீது அவருக்கு விவரிக்க முடியாத பச்சாதாபமும் இரக்கமும் ஏற்பட்டது. அவர் இவ்வளவு அழகான ஒரு பெண்ணை இதுவரை பார்த்ததே இல்லை. இப்படி ஒரு பெண் அவர் மனதைக் கவர்ந்ததேயில்லை. அவர் தன் படிப்பிலும் தொழிலிலுமே அதிக காலத்தைச் செலவிட்டதினால் பெண்களைப் பற்றிய எண்ணமே அதிகமாக அவர் மனதில் எழுந்ததில்லை. ஆனால் அவருக்கு இப்பொழுது அந்தப் பெண் மதியை மயக்க வைக்கும் மோகினி போலிருந்தாள். ஆம்! மோகினியே தான். அழகு நிறைந்த மோகினி. பேதமை நிறைந்த மோகினி. குற்றமற்ற, உலகத்தின் கண்களில் படாத அழகின் சுவை நிறைந்த மோகினி. குரூர நெஞ்சம் கொண்ட இரண்டு ஸ்திரீகளால் ஏதோ காரணத்திற்காக இந்தத் தனியான கட்டிடத்தில் சிறை வைக்கப் பட்டிருக்கும் மோகினி......டாக்டருக்கு அந்தக் கட்டிடத்தின் மாடியில் ஒரு அறையில் தான் நின்று கொண்டிருக்கிறோம் என்று உணர்ந்தபோது திக்கற்ற ஒரு அழகான பெண்ணிடம் தன்னுடைய மனப்பூர்வமான பச்சாதாபத்தையும் காதலையும் இருதய சுத்தத்தையும் எப்படிக் காட்டலாம் என்று தெரியாமல் துடித்தார்.

படுக்கைக்குப் பக்கத்தில் நின்று அந்தப் பெண் எமனோடு போராடிக் கொண்டிருக்கும் ஸ்திரீயைப் பார்த்தாள். அவளுடைய கண்கள் பயத்தாலும் துக்கத்தாலும் கலங்குவதை டாக்டரால் அந்த இடத்திலிருந்து சரியாய்ப் பார்க்கவே முடியவில்லை. ஆனால் அந்தப் பெண் துக்கம் தாங்காமல் விசிப்பது அவர் காதுகளில் கேட்டது.

மரணத் தறுவாயிலிருந்த சாரதா அந்தப் பெண்ணை ஆவலோடும் ஆர்வத்தோடும் பார்த்தாள். ரத்தமற்று வெளுத்துப் போயிருந்த அவளுடைய அதரங்களில் அலட்சியமும் விரக்தியும் நிறைந்த சிரிப்பொன்று நெளிந்தது. "வேதா! கண்ணே! உன்னைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும். இங்கே வா! கண்மணி இதோ நான் உன்னைவிட்டுப் போகப் போகிறேன்..." என்ருள் கம்பிய குரலில்.

அந்தப் பெண் மெதுவாகக் கட்டிலில் உட்கார்ந்தாள். சாரதா மெதுவாக அவளுடைய மெல்லிய கரத்தை எடுத்துத் தன் மார்போடு வைத்துக்கொண்டு கண்ணை மூடிக் கொண்டாள். அப்பொழுது வேதா

விற்கு அடக்க முடியாமல் குமைந்து வரும் துக்கத்தினுல் அழுகை பீறிட்டுக்கொண்டு வந்து விட்டது. அவள் மார்பில் தன் தலையைப் புதைத்துக்கொண்டு விக்கி விக்கி அழத் தொடங்கினுள். அந்தச் சமயத்தில் படுக்கையில் கிடந்த சாரதாவும் தன் கடைசி சுவாசத்தை விட்டாள். உடனே மரகதம் பரபரப்புடன் கட்டிலை நெருங்கிப் பார்த்து விட்டு டாக்டரைப் பார்த்தாள். அவளுடைய பார்வையைப் புரிந்து கொண்ட டாக்டர் அப்பொழுதுதான் தன்னுடைய சுய உணர்வு வந்தவர்போல் சட்டென்று நெருங்கி வந்து பார்த்தார். டாக்டரின் பார்வையிலிருந்தே விஷயத்தைத் தெரிந்து கொண்ட மரகதம் செங்கம்மாவைப் பார்த்து "ஹூம்! அவ்வளவுதான். அவள் மூச்சு அடங்கி விட்டது. நீ வேதாவை அழைத்துப் போ" என்றுள்.

வேலைக்காரி செங்கம்மா வேதாவை மெதுவாகத் தூக்கி நிறுத்தி "எழுந்திரு. போகலாம், வா" என்றுள். வேதா "அம்மா! அம்மா" என்று அலறித் துடித்தாள்.

டாக்டர் பரசுராமனுக்கு அந்தப் பெண்ணின் நிலையைக் கண்டு ஏற்பட்ட பச்சாதாபமும் பரிவும் அளவுக்கு மிஞ்சியதாகி விட்டது. இறந்துபோன தன் தாயின் சடலத்திடம் கூட ஒரு பெண்ணைச் சில நிமிடம் அனுமதிக்காத கொடுமையும் உண்டா! டாக்டர் அப்பொழுது தன் நிலையையே மறந்து விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். அவர் மெதுவாக வேதாவின் தோளில் கையை வைத்து "பாவம்! இவள்தான் கொஞ்ச நேரம் இங்கே இருக்கட்டுமே......" என்றுர் பக்கத்திலிருந்த மரகதத்தின் முகத்தைக் கெஞ்சும் தோரணையில் பார்த்துக்கொண்டே.

மரகதத்தின் கண்கள் இரண்டும் அப்பொழுது நெருப்புத் துண்டங்களாகக் காட்சி யளித்தன. கோபமும் ஆத்திரமும் குமைந்து வந்தன. "அவளை எப்படி நீர் தொடலாம்! உம்முடைய கையை எடும். உம்மை எதற்காக இங்கே நான் வரவழைத்தேன்! உம்முடைய கடமை எதுவோ, அதை மாத்திரம் நீங்கள் செய்தால் போதும்..." என்று நாகசர்ப்பம் போலச் சீறினுள். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## மோகினித் தீவு

எத்தனை எத்தனையோ காலமாக வழிவழி வந்து வளம் பெற்று விளங்கும் தமிழர் பண்பாட்டை நன்கு விளக்கும் இந்தக் கதை தமிழ் மக்களைப் பெரிதும் மோகிக்கச் செய்துவிட்டது என்று தெரிகிறது. அதற்குச் சான்றுக இதோ இந்த நூலின் இரண்டாவது பதிப்பு வெளி வந்திருக்கிறது.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், தியாகராஜ நகர், சென்னை—17; விலை ரூ. 1-12-0.

## ராஜ்யம்

பழம் பெரும் நாடாகிய பாரத நாட்டில் குடியரசு ஸ்தாபிதமாகி விட்டது. ஆகவே மக்களுக்குப் பொறுப்பும் அதிகமாகிவிட்டது. அந்தப் பொறுப்பை உணர்ந்து நடக்க மக்கள் பல விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டி யிருக்கிறது.

மனித சமூகத்தில் மக்களின் நல் வாழ்வை ஒட்டிப் பல ஏற்பாடுகள் இருக்கின்றன. மதம், சாதி, கலைக் கழகங்கள் முதலியன வெல்லாம் சமூக ஏற்பாடுகள்.

அதேமாதிரி ராஜ்யம் என்பதும் சமூகத்தின் ஓர் அமைப்புத்தான். அந்த அமைப்பின்படி ராஜ்யத்தில் பிறக்கும் ஒரு மனிதன் பிரஜை என்னும் அந்தஸ்தைப் பெறுகிறன். அந்தப் பிரஜையின் மேல் ராஜ்யத்துக்குச் சில உரிமைகள் ஏற்படுகின்றன. கடமைகளும் உரிமைகளும் சேர்ந்து சமூகத்தின் நல் வாழ்வுக்கு அடி கோலுகின்றன.

இந்த அடிப்படை அரசியல் விஷயங்களை யெல்லாம் சாங்கோபாங்கமாக இந்நூல் விளக்குகிறது.

அரசாங்கம், அதன் பேதங்கள், வரி, ஸ்தல ஸ்தாபனங்களின் நிர்வாகம், அரசியல் சுதந்திரம், இந்திய அரசியல் திட்டம் முதலியவைகளை யெல்லாம் தெளிவான நடையில் ஆசிரியர் இந்நூலில் எழுதி யிருக்கிருர். எழுதப் படிக்கத் தெரிந்த அனைவரும் இந்நூலைப் படித்துச் சுலபமாக அரசியல் அறிவைப் பெறலாம். ஆசிரியர்: கனம் க. சந்தானம்; பிரசுரம்: சக்தி காரியாலயம், ராயப்பேட்டை, சென்னை 14. விலை ரூ. 1.

## அன்னபூரணி

"மனிதனைப் போன்ற அற்பப் பிறவிக்கு எந்த விஷயமும் அற்பமாகாது" என்று ஒரு மேல் நாட்டு அறிஞர் கூறினர். அதற்கு எடுத்துக் காட்டாக இருக்கிறது அன்னபூரணி என்ற கதை.

பார்வதி செய்த தெல்லாம் தன் சிறுவயது முதல் அறிமுகமான பையனுக்குச் சாதம் பரிமாறினதுதான். அது அவன் வாழ்க்கையில் எவ்வளவு பெரிய புயலைக் கிளப்பி விட்டது!

இப்படி இந்தக் கதைத் தொகுதியிலுள்ள ஒவ்வொரு கதையும் மனித வாழ்க்கையின் விசித்திரப் போக்கை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. ஆசிரியர்: கா. ஸ்ரீ. ஸ்ரீ.; பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை 4; விலை ரூ. 2.


## உங்கள் கையின் ரேகையே உங்கள் வாழ்க்கையின் கண்ணுடி

நேரில் வர இயலாதவர்கள் இரண்டு கை ரேகைகளையும், ரப்பர் ஸ்டாம்பு மையை கையில் தடவி ஒரு வெள்ளைக் காகிதத்தில் பதிய வைத்து எடுத்து அனுப்பினுல் எதிர் காலப் பலன்களை நேரில் பார்த்தறிவது போலவே வி. பி. தபால் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

அருப்புக்கோட்டை பி. எஸ். வி. அய்யங்கார்

ரேகை சாஸ்திரி - 30, மூர்த்தி செட்டித் தெரு, கும்பகோணம்

# குறை தீர்ந்தது!

### விமலன்

இந்தப் பரந்த உலகத்தில் என்னைப்போன்ற அசட்டுப் பெண் இருக்கவே முடியாது. இல்லா விட்டால் போயும் போயும் ஒரு எழுத்தாளரைப் போய்க் கலியாணம் செய்து கொள்வேனு! அவருடைய எழுத்தையும், பேச்சையும் கண்டு அவர் எழுதுகிற கதைகளில் வருகிறபடி 'காதல்' கொண்டு கலியாணமும் செய்து கொண்டு விட்டேன்! என்னைப்போன்ற பாக்கியசாலி இருக்கவே முடியாது என்றெல்லாம் கோட்டை கட்டினேன். 'பிரபல எழுத்தாளர் என் கணவர்' என்ற நினைப்பில் என்னையே மறந்தேன். அது எவ்வளவு பெரிய அசட்டுத்தனம் என்று இப்போது தான் தெரிகிறது!

கலியாணமான மறுநாளே தன்னுடைய இலட்சியத்தையும், கொள்கையையும், திட்டங்களையும் பற்றி அடுக்குத் தொடருடன் வர்ணனை வழிய அளந்தார். நானும் பல்லைக் காட்டிக் கொண்டு அசடுவழியக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

''ராதை! நீயே என் உயிர், உள்ளம், எல்லாம். நீதான் அவிந்து கிடந்த என் மன விளக்கில் புதுமை எனும் எண்ணெயை ஊற்றி, வாழ்வு என்ற திரியிலே இன்ப ஜோதியை எழுப்பி விட்டாய். அது என்றென்றும் மங்காத தங்க நிற ஒளி பரப்பி......'' என்று அவர் சொல்லச் சொல்ல உண்மையிலேயே நான் சொக்கிப் போய் விட்டேன்.

ஆனால் இப்போது, அவைகள் எல்லாம் வெறும் சொல் கோட்டைகள் தான் என்று தெரிகிறது. அவரது கதா நாயகர்கள் எல்லாருமே கிட்டத்தட்ட இதே பாணியில் இதே வார்த்தைகளை எல்லாக் கதைகளிலும் மாற்றிச் சொல்லிக் கொண்டு வருகிறார்கள்! மற்ற ஆசிரியர்களும் 'அபாரம்' 'பிரமாதம்' என்றெல்லாம் புகழ்ந்து 'ரோகிணி' அவர்களை ஆகாசத்தில் தூக்கி வைத்து விடுகிறார்கள்!......

வரவர அவருடைய வழக்கங்கள் ஒன்றுவது பிடித்தால்தானே! இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் 'கதை எழுதுகிறேன்' என்று சொல்லிக் கொண்டு, திவட்டிக் கொள்ளைக்காரன் மாதிரி நடு விளக்கைப் போட்டுவிட்டுத் தூங்கி விழுவதும், பிறகு நான் போய் விளக்கை அணைத்தால் ஆவேசம் வந்தது மாதிரி திடீரென்று துள்ளி எழுந்து, ''யார் விளக்கை அணைக்கச் சொன்னது! ஏன் அணைத்தாய்! இங்கே நான் ஒரு மனிதன் இருக்கிறேன் என்பது தெரியவில்லையா!'' என்றெல்லாம் எட்டுக்கட்டை சுருதியில் இரைவதும் சர்வ சகஜமாகி விட்டது.

''நீங்கள்தான் தூங்கி விட்டீர்களே என்று......'' — இது நான் ஆரம்பிக்கும் சமாதான முயற்சி.

ஆனால் அதைக் காதிலேயே வாங்காமல் அதே சுருதியில், ''வெல் தூங்கினது! கண்ணை மூடியபடி கற்பனையல்லவா செய்து கொண்டிருந்தேன்! வரவர உனக்கு மூளையே—'' என்ற எதிர் பாணம் அவரிடமிருந்து கிளம்பும். பிறகு ஒரு ரகளை ஆரம்பித்து அரைமணி நேரத்திற்குப் பிறகு வெறும் தரையில் படுத்துக்கொண்டு நான் விசிப்பதும், அவர் தன்னுடைய கதாநாயகர்களைப் போல் ஜன்னலுக்கு வெளியில் தெரியும் நீல நிற வான வெளியை வெறித்துப் பார்ப்பதும், பிறகு அடிக்கொரு தடவை பெருமூச்சு விட்டுக் கொண்டு அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலவி வருவதும் தினசரிக் காட்சிகளாகி விட்டன.



''தேர்தலுக்கு நிற்கலாமென்று பார்க்கிறேன். அதற்கு முக்கியமாக என்ன வேணும்?''

''நிற்கிறதற்கு என்ன ஸார் வேணும்? இரண்டு கால் வேணும்!''

இரவு முழுவதும் கண் விழித்து விட்டு, காலை ஒன்பது மணி வரை தூங்கி வழிவார் பிரபல எழுத்தாளர் 'ரோகிணி'. அவரை எழுப்ப ஒரு மணி நேரமாவது பிடிக்கும். எழுப்பி விட்டால் ''ஏன் சீக்கிரம் எழுப்பவில்லை!'' என்ற அதிகாரம் தான் பறக்கும். குளிக்காமல் தலையில் தண்ணீரைத் தடவி வாரிக் கொண்டு அவசரச் சாப்பாட்டை அள்ளிப் போட்டுக் கொண்டு வழக்கமாகக் காரியாலயத்திற்கு ஒரு நாளைப் போலத் தாமதமாகத் தான் போவார். இதற்கெல்லாம் நான்தான் காரணமாம்! எப்படியிருக்கிறது கதை!

அப்பப்பா! எனக்கு இந்த வாழ்வு போதும் போதும் என்றாகி விட்டது.

சமீபத்தில் அவரது 'நீண்ட சிறு கதை' ஒன்று பிரசுரமாயிற்று. அதைப் படித்தவுடன் அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. பக்கம் பக்கமாக ஒரு அபலைப் பெண்ணுக்காக எதுகை மோனைகளுடனும் அலங்காரச் சொற்களுடனும் கண்ணீரை விட்டு, இறுதியில் சமூகத்தையும் அதன் சிண்டையும் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கி விட்டு, 'இதுதான் அவள் வாழ்வா! இதுதான் சமூகம் அளித்த தீர்ப்பா!' என்று சக்கைப் போடு போட்டு முடித்திருந்தார்.

"ராதை! என் கதை சிறுகதைப் போட்டியிலே முதல் பரிசு வாங்கியிருக்கிறது! எப்படி என் திறமை......!" என்று பெருமை பொங்க வழியக் கேட்டார்.

'கற்பனையிலே உருவெடுக்கும் இந்தப் பெண்களின் உணர்ச்சிகளுக்கு இவ்வளவு மதிப்புக் கொடுக்கும் நீங்கள், சொந்த மனைவியை மட்டும் மரக்கட்டை என்று நினைப்பது விசித்திரம் தான்—' என்று ஆத்திரம் தீரச்சொல்ல நினைத்தேன். ஆனால் ஒரு வார்த்தையாவது கோவையாக வெளி வந்தால்தானே!



"ரொம்ப நன்றாக இருக்கிறது!" என்று தான் அப்பொழுது என்னால் சொல்ல முடிந்தது.

* * *

அன்று ஒரு நாளுமில்லாத திருநாளாக அவர் என் அறைக்கு வந்து உட்கார்ந்து கொண்டார். கையிலே ஒரு கத்தைக் காகிதமும் பேனாவும் காட்சியளித்தன. தொண்டையைக் கனைத்துக்கொண்டு "ராதை! உன் வாழ்வில் ருசிகரமாக — ரஸமாக—ஏதாவது நடந்திருந்தால் சொல்லேன்! ...... 'புதுமை' பத்திரிகையின் ஆசிரியர் என்னை மிகவும் தொந்தரவு செய்கிறார்!" என்றார்.

நான் பதிலே சொல்லவில்லை. எனக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது.

"சீர்திருத்தத்தை அடிப்படையாக வைத்து ஒரு சிறு கதையை ........." அதற்குமேல் அவர் சொன்னவை என் காதில் விழவில்லை. தானே திருந்தாமல் இவர் சமூகத்தைச் சீர்திருத்துகிறாராம்! அழகுதான்! பிரபல எழுத்தாளர் 'ரோகிணி'யின் கதைகளைப் படித்து இன்பமடையும் ரஸிகர்களுக்கு, அவரது மனைவியின் வேதனைகளைக் கற்பனை செய்து பார்க்கும் சக்தி இருந்தால் தானே! எழுத்தாளரின் மனைவி இயந்திரமாக இருந்தால்தான் ஒத்து வரும். ஆசாபாசங்களுக்கும் அவளுக்கும் வெகு தூரம். இதுதான் நான் கண்ட உண்மை. உம்; என்னவோ சொல்லிக் கொண்டு போகிறேனே! சட்டென்று அவரைத் திருத்த ஒரு யோசனை தோன்றியது.

அதே சமயம் "சொல்லேன் ராதை!" என்று உற்சாகப்படுத்தினார்.

"ஆனால்......நீங்கள்......" வேண்டுமென்றே வார்த்தையை வளைத்து வளைத்துப் பேசினேன்.

"இல்லை; நான் கோபித்துக் கொள்ளவோ சந்தேகப்படவோ மாட்டேன்."

"ஊஹூம்! அப்புறம் என்ன......"

"சத்தியமாக மாட்டேன்; தைரியமாகச் சொல்லு, ராதை!"

"நிஜமாகவே நடந்தது. அதுவும் என் இளம் பிராயத்திலே........." என்று சொல்லி நான் நிறுத்தினேன்.

அவர் காதைத் தீட்டிக் கொண்டு குறிப்பு எழுதத் தயாரானார்.

"அவன் தான் கண்ணன்!"

"எவன் அந்தக் கண்ணன்!"

"அதுதான் எங்கள் எதிர் வீட்டுக் கண்ணன். பெயருக்கேற்றபடி அழகான கண்களுடன் கவர்ச்சிகரமாக இருப்பான். படிப்பிலே, விளையாட்டிலே, குழல் ஊதுவதிலே எல்லாவற்றிலுமே கெட்டிக்காரன் அவன்."

அவர் 'கண்ணன்' என்று எழுதிக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். ஒரு நீண்ட பெருமூச்சையும் விட்டு விட்டுக் கதையைச் சொல்லத் தொடங்கினேன்:

"அவனது அழகான முகத்தை நாள் முழுவதும் பார்த்துக் கொண்டிருக்கத் தோன்றும், அவ்வளவு கவர்ச்சி! அவனது தங்கை கமலா எனக்குத் தோழியாகிவிடவே அடிக்கடி அங்கே போக ஆரம்பித்தேன். தினமும் காலையில் நான் கண்ணன் கமலா மூன்று பேரும் பூப்பறிக்கப் போவோம்." இங்கே கதையை நிறுத்தி விட்டு இன்னுமொரு நீண்ட பெருமூச்சு விட்டேன். அப்பொழுது அவரது முகத்திலே கசப்பான மாறுதல் ஏற்பட்டதையும் நான் கவனிக்கத் தவறவில்லை.

"நான் ஏழாவது வகுப்பும், கண்ணன் எஸ். எஸ். எல். ஸி. வகுப்பும் படித்துக் கொண்டிருந்தோம். எனக்குக் கணக்குச் சரியாக வராது. ஆகவே, கணக்குப் பாடத்தைக் கண்ணனிடம் கற்றுக்கொள்ள அவன் வீட்டிற்குப் போவேன். என்னையறியாமலேயே அவனிடம் எனக்கு ஒரு வித அன்பு வளர்ந்தது......"

அவரது முகம் விளக்கெண்ணெய் குடித்தது போல் மாறியது. அன்பு முற்றினால் என்ன நடக்கும் என்று அவருக்குத் தெரியாதா! பேனாவைக் கீழே வைத்தார்; கைகளைச் சொடுக்கிக் கொண்டார்; கடைசியாகக் கொட்டாவி விட்டு விட்டு முகத்தைச் சுளுக்கிக் கொண்டார்.

நான் விடவில்லை.

"ஒரு நாள் கணக்குப் போடப் போனபோது அவனுக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ, 'ராதை! இன்றைக்குக் கணக்கு வேண்டாம்' நாம் இரண்டு பேரும் வாழைக் கொல்லையில் விளையாடிவிட்டு வருவோம்......' என்று என்னை இழுத்துக்கொண்டு போனான். எனக்கு என்ன

செய்வதென்றே தெரியவில்லை. வாழைக் கொல்லையின் மத்தியிலிருந்த ஒரு பெரிய பாறையின் மீது உட்கார்ந்து கொண்டான். நானும் அவன் அருகில் உட்காரவேண்டுமென்று பிடிவாதம் பிடித்து என்னையும் உட்கார வைத்தான். பிறகு ஷாஜஹானின் உயர்ந்த தெய்வீகக் காதலையும் மும்தாஜ் மகலின் அன்பையும் விளக்கும் அழகான ஒரு கதையை உணர்ச்சியுடன் சொல்லி முடித்தான். அப்போது உண்மையாகவே எனக்கு அழுகை வந்து விட்டது. நிட. சென்று அவன், 'அழுகிறாயா, ராதை! ஊஹூம், அழாதே! ...... நான் கண்ணன் ......நீ என் ராதை ...... உம், சிரி!' என்று உற்சாகப்படுத்தினான். நான் சிரித்தேன்.



"'என்னை விட்டு நீ போகவே கூடாது, ராதை! எனக்கு உன்னிடம் நிஜமாகவே ஒருவித......!' என்று நிறுத்திவிட்டு என்னைப் பார்த்தான்.

"எனக்குக் கூடத்தான் கண்ணா! கணக்குப் பாடம்......" என்று இழுத்தேன் நான்.

"'ராதை! உனக்குக் கணக்குச் சொல்லிக் கொடுக்க நினைத்தேன். ஆனால் உன் அழகு எனக்குக் காதலைச் சொல்லிக் கொடுத்துவிட்டது!'

"இருவரும் சிரித்தோம்! பிறகு இருவரும் கைகோத்துக் கொண்டு... அதை இன்று நினைத்தாலும்........." இதைச் சொல்ல நான் என் உடலைச் சிலிர்த்துக் கொண்டேன். அவர் முகம் வெளிறியது. பிறகு பேயறைந்தது போலப் பயங்கரமாக மாறியது.

"ராதை!" என்றார் கோபம் கொதிக்க.

நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே பலன் கிடைத்து விட்டது.

"என்ன......!"

"துரோகி —... உன் மென்னியைத் திருகி ..."

அவர் துடித்தார். நான் நடித்தேன்.

"நீங்கள் கொடுத்த வாக்குறுதியை மறந்து..."

"பேசாதே, நாயே! உன்......"

"கம்பன் வீட்டுக் கட்டுத் தறி கவி பாடுமானால் எழுத்தாளர் ரோஹிணியின் மனைவி கதை சொல்லக் கூடாதா!"

"என்ன கதையா ... நிஜம் என்று நீ......" என்று தடுமாறிக் கொண்டே கேட்டார் அவர். அவர் முகத்தில் அசடு வழிந்தது.

"ஆமாம்! அப்படிச் சொன்னால்தானே உங்கள் ஆண்மை உணர்ச்சி ஆத்திரப்படும்! பெண்களின் உள்ளத்தைப் புரிந்து கொள்ளாமல் பெண்களின் உள்ளத்தைப் பற்றிக் கதைக்கும் எழுத்தாளரைக் கதையினால்தானே திருப்ப முடியும்! அதனால்தான்......" என்றேன்.

"ராதை! உன் உள்ளத்திலே ஊற்றெடுத்த உண்மை உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளாமல் புறக்கணித்து, கற்பனைப் பெண்களுக்காகவும், சமூகத்திற்காகவும் நான் எழுதியவைகள் வெறும் குப்பைகள்! ராதை, என்னை மன்னித்தேன் என்று............" என்று கூறியவாறே என்னை நெருங்கினார்.

"போதுமே உங்கள் கெட்டிக்காரத்தனம்! எவ்வளவுதான் சீர்திருத்தக் காரர்களானாலும் ஆண் ஆண்தான். பெண் பெண்தான்" என்றேன்.

"இப்போது ராதை......" என்று இழுத்தார்.

"என் குறை தீர்ந்தது!......" என்று சொல்லிக் களுக்கென்று சிரித்தேன். அவரும் சிரித்தார்.

★

## அவன் கேட்டது!

அம்பி:—அம்மா, தெருவிலே ஒரு ஆள் ஓயாமல் கத்துகிறானே, அவனுக்கு அரையணா போடட்டுமா?

அம்மா:—போடேன். ஆமாம், அவன் என்ன சொல்லிக் கத்துகிறான்?

அம்பி:— ஒன்றுமில்லை, "பலூன், பலூன்!" என்று அவன் கத்துகிறான்!

★





## தூரதிருஷ்டிக் கண்ணாடி

இயற்கைக் காட்சிகளையும் தூரத்திலுள்ள காட்சிகளையும் கண்டு களியுங்கள். குதிரைப் பந்தயம், ஸினிமா, வேட்டை, தியேட்டர் முதலியவைகளுக்கு இன்றியமையாதது. கண்ணுக்குப் புலப்படாத வஸ்துக்களையும் பெரியதாகக் காட்டும். விலை ரூ. 4/8/- பாக்கிங், தபால் செலவு ரூ. 1/4/-

**எலக்ட்ரிக் மூக்குக் கண்ணாடி:** நவீனமாகக் கண்டு பிடிக்கப்பட்டது. இதனால் நல்ல இருட்டில்கூட விளக்கின் உதவியின்றி எழுதவோ, வாசிக்கவோ செய்யலாம். கண்களுக்குக் கெடுதல் செய்யாது. விலை ரூ. 5-8-0. தபால், பாக்கிங் செலவு 1-8-0 தனி.

**ரூ. 25-ல் ரேடியோ செட்:** இதில் கிடைக்கும் இனிய நாதத்தால் நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். மின்சார சக்தி, பாட்டரி உதவியின்றி இயக்கலாம். மிகவும் மலிவானது. ஒன்றின் விலை ரூ. 25. ஸ்பெஷல் நெ. D-13 ரூ. 30. வி. பி. பி. சார்ஜ் ரூ. 5 தனி.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்

●

**SARANG MACHINERY MART (K 500)**
**ALIGARH CITY (U. P.)**

## ஸினிமா யந்திரம்




இந்த இயந்திரம் ஒரு ஸெல் கொண்ட டார்ச்சினால் இயக்கப்படுகிறது. பிலிமின் பிம்பத்தை இரண்டு சதுர அடி அளவுக்கு ஸ்கிரீனிலோ அல்லது வெள்ளையான சுவரிலோ பளிச்செனக் காட்டும். உங்கள் நண்பர்களுக்கும் அக்கம்பக்கத்தினருக்கு மிடையே பிரத்யேகமாக ஸினிமாக் காட்சிகளைக் கண்டு களியுங்கள். படத்துடனும் உபயோகிக்க வேண்டிய எல்லா குறிப்புகளுடனும் அடங்கியது. விலை ரூ. 12-8-0 தபால், பாக்கிங் செலவு ரூ. 2-8-0 தனி.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்

●

**FILM STORE, NAYAGANJ**
**P. O. HATHRAS (UTTAR PRADESH)**

# பெரியவர்களுக்கும் குழந்தைகளுக்கும்






SSTAS.WL-41A-TAMIL

# மலச்சிக்கலை
## ஒரே இரவில்
## அகற்றுகிறது

ஏஜெண்டுகள்:

**ஓரியன்டல் மெர்க்கன்டைல் ஏஜென்ஸி**
99.A. அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1.

### கொசு வலை

கொசுக்கடியின் உபத்திரவத்திலிருந்து எங்களது உயர்ந்த ரக வலையினால் காப்பாற்றிக்கொள்ளுங்கள். வெளியிடங்களில் ரூ. 15க்குகூட கிடைப்பது கஷ்டம். விலை ரூ. 7-8-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

### 14 பாஷைகள் 48 மணி நேரத்தில்

ஆங்கிலம், ஹிந்தி, மராத்தி, குஜராத்தி, பர்மீஸ், தமிழ் முதலிய பாஷைகளை 48 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. வி. பி. பி. சார்ஜ் அணா 12.

### எலக்ட்ரிக், ரேடியோ கைட்

மின்சார சக்தியின்றி இயக்கக் கூடிய ரேடியோவை ரூ. 15 செலவிலேயே தயாரியுங்கள். ரேடியோ ரிப்பேர், எலக்ட்ரிக் ஒயரிங் முதலியவைகளைக் கற்றுக்கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை ரூ. 4-4-0. வி. பி. பி. சார்ஜ் அணா 12 தனி.

### தொழில் புஸ்தகங்கள்

சோப் தயாரிக்கும் முறை ரூ. 3. வாசனை திரவியங்களுக்கானது ரூ. 3. தையல், கட்டிங் முறை ரூ. 3-8-0. போட்டோகிராபிக் ஆசான் ரூ. 3. டிராயிங், பெயிண்டிங் ரூ. 4. ரப்பர் தொழில் ரூ. 3. வி. பி. பி. சார்ஜ் தனி.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்

**SUPREME TRADERS (K. L)**
RANGMAHAL, ALIGARH, U. P.



### நவீன அமெரிக்கன் ஸ்டவ்

ஓர் இன்றியமையாத வஸ்து



★ எந்நேரத்திலும் வெகு சீக்கிரமாகச் செய்யலாம்.

★ சுலபமாக கையாளக் கூடியதுடன் மிகவும் சிக்கனமானது.

★ வீடுகளுக்கும், பிரயாணத்திற்கும் பிக்னிக்களுக்கும் சிறந்தது.

★ 5 முதல் 10 துளி ஸ்பிரிட் அல்லது மண் எண்ணை நீண்டகாலம் இயங்கச் செய்யும். தொந்தரவின்றி பால், தண்ணீர் காய்ச்சவும் டீ தயாரிக்கவும் செய்யலாம். ஒன்றின் விலை ரூ. 5/-

தபால், பாக்கிங் செலவு ரூ. 1-8-0

கொஞ்சமே ஸ்டாக் உள்ளதால் உடனேயே ஆர்டர் செய்யவும்

**BLUEBIRD & CO..**
3686, Charkhewalan :: DELHI - 6




கோட்டமதூர் ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜியோதிஷ ஆபீஸ் உரிமையாளர் ஜோஸ்யர் K. A. ஜெயராம அய்யருடைய குமாரன் சிரஞ்சீவி மூர்த்தி கர்ண பூஷண முகூர்த்தத்தின்போது எடுத்த படம். மேலே நிற்பவர்கள் நவக்கிரஹ ஹோமம் செய்த சாஸ்திர விற்பன்னர்கள். நடுவில் உட்கார்ந்திருப்பவர்களில் இடமிருந்து வலம், (1) ஜியோதிஷரின் ஆத்மார்த்த துணையாளர் ஆர். வடிவேல் முதலியார், (2) ஜியோதிஷரின் தகப்பனார், (3) ஜோஸ்யர், (4) ஜோஸ்யரின் ஸஹதர்மிணி கையில் இருக்கும் குழந்தை சிரஞ்சீவி மூர்த்தி. மற்றவர்கள் ஜியோதிஷரின் குடும்பஸ்தர்கள்.




நான்கு தினங்களாக வானம் கண் திறக்கவில்லை. விடாமல் மழை பெய்து கொண்டிருந்தது. காட்டுப்பட்டி ஸ்டேஷனுக்கு என்னை அதிகாரிகள் மாற்றியபோது எனக்கு உண்டான ஆத்திரம் கொஞ்ச நஞ்சமில்லை. தண்ணீர் இல்லாக் காட்டில் கொண்டு போய்ப் போட்டு விட்டார்களே என்று அவர்களைச் சபித்தேன். ஆனால் நான் போன முகூர்த்தம் மழை பெய்ய ஆரம்பிக்கவே, போர்ட்டர் கண்ணுசாமி என்னை வாழ்த்தினான். அது என் மனத்துக்கு எவ்வளவோ ஆறுதலாக இருந்தது.

ஆனால் என் நிலை...? மழையைக் காணாமல் காய்ந்து கிடந்த பூமியைப் போல என் உள்ளமும் இந்த ஐந்து வருஷங்களாகவே வெறிச்சோடிக் கிடந்தது. அந்த வறட்சியை மாற்ற எந்த மழையினாலும் முடியாதா?

நான் ஜானகியை ஐந்து வருஷங்களுக்கு முன்பு விவாகம் செய்து கொண்டேன். புனாவில் அப்போது நான் மிலிடரி அக்கௌண்ட்ஸில் வேலையாயிருந்தேன்.

புனாவிற்குப் போய் விட்டாலும் கூட என் கலியாணத்தைச் சீக்கிரம் பண்ணி விட வேண்டும் என்று அடித்தாள் என் அம்மா.

கடைசியில் ஜானகியைப் பெண் பார்க்க ஒரு மாதம் லீவு வாங்கிக் கொண்டு ஊருக்கு வந்தேன்! பெண்ணைப் பிடித்து விட்டால் உடனே தாலி கட்டவும் தயாராக இருக்க வேண்டுமல்லவா?

மாமனாராக வரவிருந்தவர் சம அந்தஸ்துள்ள கண்ணியமான மனிதர். சென்னையில் சர்க்கார் உத்தியோகம் அவருக்கு. அருமையாக வளர்க்கப்பட்ட பெண் ஜானகி! வேறு பிள்ளைகளும் கிடையாது. தாரத்தை இளம் வயதிலேயே இழந்து, பெண்ணின் க்ஷேமத்தை உத்தேசித்து மறுவிவாகத்தைத் துறந்த மனிதர்.

மட மட வென்று கல்யாணக் காரியங்கள் தொடர்ந்து நடந்தன. 'நான் மாப்பிள்ளையாகி விடுவேன்' என்ற தைரியத்தில் என் மாமனார் எல்லா ஏற்பாடுகளையும் தயாராகவே செய்து வைத்திருந்தார்.

கல்யாணத்தில் எங்கள் கும்பல்தான் அதிகம். உற்றாரும், உறவினர்களும், மற்ற நண்பர்களும் ஏராளமாக வந்திருந்தனர். என் மாமனாரின் வழியில் ஏதோ 'உறவு' சொல்லிக் கொண்டு மிகச் சில பேர்தான் இருந்தார்கள். பெண்ணின் தாயாரின் வழியில் ஒரு மனிதர் கூட இல்லாதது எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. பாத்தியதைப் பட்டவர்கள் இருந்தும் வராமல் இருந்ததற்கு மேலெழுந்த வாரியாகக் காரணங்கள் சொல்லி விட்டார் என் மாமனார். நாங்களும் வற்புறுத்திக் கேட்கவில்லை. ''குடும்பம்' என்றிருந்தால் ஆயிரம் இருக்கும்'' என்று அம்மா கூடச் சொல்லி விட்டாள்.

ஜானவாசம் முடிந்ததும் மாப்பிள்ளைத் தோழன் கணேசன், ''முக்கிய சமாசாரம்!'' என்று அழைத்தான். வெளியே வந்ததும், ''ஒன்றும் கலவரப்படுத்தி விடாதே. இந்த மாதிரி நல்ல காரியங்களில் 'விக்கினம்' செய்ய என்றே நாலு பசங்கள் எப்போதும்

தயாராக இருப்பார்கள்" என்று ஒரு குட்டி உபதேசம் செய்து விட்டு ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தான். என் கைகள் நடுங்கின. திடீரென்று உலகமே சுழல்வது போலிருந்தது. அருகிலிருந்த விளக்கொளியில் அதைப் படித்தேன். கடிதம் பின் வருமாறு எழுதப் பட்டிருந்தது.

"அவசரப்பட்டு இந்தக் கல்யாணத்திற்கு நீங்கள் சம்மதப்பட்டு விட்டீர்கள். சம்பந்தி பிராமணர், பெண்ணின் தாய் விட்டாரையே ஒதுக்கித் தள்ளி விட்டுக் கல்யாணம் செய்து வைக்க முன் வந்திருக்கிறார். புது சம்பந்தத்தில் 'பழைய உறவை' மறக்கப் பார்க்கிறார். காத்திருந்தவன் பெண்சாதியை நேற்று வந்தவன் கொண்டு போன கதையாக இதைப் பண்ணி விட்டார் அவர். நீங்களும் இதற்கு உடன்பட வேண்டுமா?"

கடிதம் மொட்டையாக வேறொரு விவரமும் குறிப்பிடாமல் இருந்தது. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. கணேசனும் நானும் வெகு நேரம் இதைப் பற்றியே தர்க்கித்துக் கொண்டிருந்தோம். இந்த மாதிரி மொட்டைக் கடிதங்களுக் கெல்லாம் மதிப்பே கொடுக்கக் கூடாது என்று அவன் ஒரேயடியாகக் கட்சி பேசினான்.

விஷயம் அறிந்த என் தகப்பனாரும் அவன் சொன்னதை ஆமோதிக்கவே மாங்கல்ய தாரணம் நிர்விக்கினமாக நடந்தேறியது.

★

பூனாவில் நான் தனிக் குடித்தனம் தொடங்கி விட்டேன். மனத்தில் ஏற்பட்ட ஒரு கறையின் நிமித்தம் நான் எதிர்பார்த்த அளவுக்கு ஜானகியிடம் தாம்பத்யம் ஒட்டவில்லை. எவனோ எழுதிய அந்தக் கடிதம் எனக்கும் அவளுக்கும் இடையே ஒரு பெரும் திரையைப் போட்டுவிட்டது. அதைக் கிளறி விஷயத்தை நிரூபணம் செய்து கொள்ள மனத்திற்குத் தெம்பு இல்லை. அதன் மூலம் இன்னும் என்னென்ன பயங்கரங்கள் வெளியாகுமோ என்ற பயம் என்னைச் செயலற்றவனாகச் செய்து விட்டது. என்னுடைய 'விட்டேத்தி'யான நிலையைக் கண்டுதானோ என்னவோ, ஜானகியும் ஒட்டுதலில்லாத சோக பாவத்துடன் இருந்தாள். ஒருவரையொருவர் புரிந்து கொள்ள முடியாமலேயே 'தாமரை இலைத் தண்ணீர்' வாழ்க்கைதான் எங்களுக்கு லபித்தது.

இந் நிலையில் ஒருநாள் திடீரென்று அம்மாவிற்கு 'அபாயம்' என்று தந்தி வந்தது. கான்சர் நோய் அவளை யமனிடம் சேர்ப்பித்து விட்டது. "நாட்டுப் பெண் வந்த வேளை, மாமியாரைத் தொலைத்துவிட்டாள்" என்ற அபவாதம் ஜானகிக்கு ஏற்பட்டது. நானும் அதை ஆமோதித்தேன். ஜானகியின் பேரில் எனக்கு அளவில்லாத வெறுப்பு வளர்ந்தது. தாய் இறந்ததற்காக ஊருக்கு வந்த நான் ஜானகியைத் தள்ளியே வைத்து விடுவது என்ற நிர்மானத்துடன் அவளைப் பிறந்தகத்தில் கொண்டு போய் விட்டு விட்டுத் தனியாகவே புனா வந்தேன்.

ஜானகியிடமிருந்தும், அவள் தகப்பனாரிடமிருந்தும் கடிதங்கள் வந்து கொண்டேயிருந்தன. அவைகளைப் பாராமலேயே நான் கிழித்தெறிந்து விட்டேன். பிடிக்காத மனைவியை ஒதுக்கித் தள்ளுவதற்குக் காரணங்களா இல்லை?

★

என் சிந்தனை கலைந்தது. இப்போது வானம் 'பிசு பிசு' வென்று தூறிக்கொண் டிருந்தது. ஒரு மணிக்கு 'வரும் 'பாஸஞ்சர் வண்டியின்' ஆராதனைக்காகக் குடையை எடுத்துக் கொண்டு இருளில் கிளம்பினேன். கண்ணுசாமி தூங்கி விழுந்து கொண்டு தன் கடமையைச் செய்து கொண்டிருந்தான்.

ரயில் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. அதிலிருந்து ஒரே ஒரு மனிதர் இறங்கினார். இந்த அவேளையில் யார் இங்கே இறங்குவது என்ற சிந்தனையில், அவரிடமிருந்து டிக்கெட்டை வாங்கிக்கொண்டு, கதவையும் இழுத்துப் பூட்டிவிட்டுக் குடையுடன் 'குவார்ட்டர்ஸ்' பக்கம் நகர ஆரம்பித்தேன். இறங்கிய மனிதரும் வாலிபர்தான். கையிலிருந்த விளக்கொளியில் அவர் உருவம் மங்கலாகத் தெரிந்தது.



முதல் திருடன்:—மரியாதையாக முழுப் பணத்தையும் கீழே வையும்......

இரண்டாவது திருடன்:—சார், சார்! என்னிடம் வாருங்கள், ரொம்ப மலிவு! பாதிப் பணம் கொடுத்தால் போதும்!



"ஸார், இங்கே வண்டி ஒன்றும் கிடைக்காதா, இந்த நேரத்தில்? ......நான் காட்டுப்பட்டி அக்கிரஹாரத்துக்குப் போக வேண்டும் .........இந்த மாதிரி இருக்கும் என்று தெரிந்திருந்தால் காலை வண்டியில் கூட வந்திருப்பேன்..." என்று என்னிடம் வலிய வந்து உறவு கொண்டாட ஆரம்பித்தார்.

"வண்டியா? நல்ல காட்களிலேயே இங்கு நீங்கள் சொல்கிற 'வஸ்து' அகப்படாதே! அதுவும் இந்த மழையிலா......? காட்டுப்பட்டி என்ன பெரிய 'நகரமா?' எப்போதும் வண்டிக்காரர்கள் காத்துக் கிடக்க...?" என்றேன்.

இதைக் கூறிவிட்டு சற்று நேரம் பேசாமலேயே இருந்தேன். மழை வலுத்தது. காற்றும் சேர்ந்து கொண்டு கர்ஜனை செய்து இரவின் பயங்கரத்தை அதிகப்படுத்தியது. அந்த நிலையில் யாருக்கும் அந்த மனிதரிடம் அநுதாபம் ஏற்படுவது இயற்கையே. நான் பரிவு காட்டினேன்.

"உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லையென்றால் இரவு என் ஜாகையில் தங்கிவிட்டு, காலையில் மழை நின்றதும் போங்களேன். உங்களைப் போகவிடாமல் அடிப்பதற்கென்றே போல, மழை ஜமாய்த்துத் தள்ளுகிறதே."

என் கோரிக்கையை அவர் நிராகரிக்கவில்லை. இருவரும் வீட்டை யடைந்தோம். சிறிது நேரம் லோகாபிராமமாகப் பேசிக் கொண்டிருந்த நான் அவரிடம் "காட்டுப்பட்டிக்கு என்ன காரியமாக வந்தீர்களோ?" என்று கேட்டு வைத்தேன்.

"அதுவா? அது ஒரு பெரிய கதை!" என்று என் பதிலை எதிர்பாராமலேயே தன் கதையைச் சொல்ல ஆரம்பித்து விட்டார் :—

"நான் பிறந்த குடும்பம் மிகப் பெரிது. நான் சிறு வயதிலேயே என் பெற்றோரை இழந்து விட்டேன். நான்தான் கடைக்குட்டி. மற்றவர்கள் எல்லாரும் பெண்கள். எனக்கு மூத்தவர்கள். எல்லோருக்கும் நல்ல இடத்திலேயே கல்யாணமாகி இருந்தது. மூத்த சகோதரி என்னைத் தன்னிடமே வைத்துக் கொண்டு வளர்த்து வந்தாள். என் அத்திம்பேரும் என்னிடம் விசுவாசமாகவே இருந்தார். அவருடைய செலவில் தான் நான் படித்துப் பெரியவனானேன். அவருடைய பெண் ஜானகியை—அதாவது என் சகோதரி மகளை—எனக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று அந்தத் தம்பதிகள் எண்ணியிருந்தனர். எனக்கும் என் மருமாளிடம் விசுவாசந்தான். எதற்கும், அதிர்ஷ்டம் வேண்டாமா? திடீரென்று சகோதரி என்னைத் தன் மாப்பிள்ளையாகப் பார்க்கக் கொடுத்து வைக்காமல் இறந்து விட்டாள்.

படிப்பை முடித்துக் கொண்டு நான் வடக்கே உத்தியோகம் பார்க்கச் சென்று விட்டேன். ஒரு முறை ஊருக்கு வந்தபொழுது எங்கள் கல்யாண விஷயம் ஏற்பாடாகி இருந்தது. மருமாள் புது மெருகுடன் என் மன அரங்கில் நர்த்தனமாடினாள். சகஜமாகப் பழகிய காரணத்தினால் இந்த ஏற்பாட்டில் அவள் சம்மதமும் எப்படியிருக்குமென்று தெரிந்து கொள்ள ஆசைப் பட்டேன். ஒரு நாள் நேரிடையாகவே அவளைக் கேட்டு வைத்தேன். அவள் சொன்ன பதிலைக் கேட்டதும் என் மனக் கோட்டைகள் சிதறித் தரையோடு தரையாகின.

"மாமா, அப்பாவுக்கு இந்தக் கலியாணத்தில் இஷ்டமிருந்தாலும், நான் சொல்வதைக் கேட்டு வருத்தமடைய மாட்டீர்களே. உங்களை நான் வெறுக்கவில்லை. ஆயினும் ஒன்றாகிப் பழகிவிட்ட காரணத்தினால், நான் உங்களைச் சகோதரனாகத் தான் பாவிக்க முடிகிறது. எனக்கு உடன் பிறப்பு இல்லாத குறையை நீக்கி, நீங்கள்தான் அப்பாவிடம் சொல்லி வேறு இடத்தில் பார்க்கச் செய்ய வேண்டும், அண்ணா" என்று சொன்னாள்.

முறையை மாற்றி அவள் என்னை அழைத்து விட்டாள். எனக்கு அவமானம், ஆத்திரம் எல்லாம் பீறிட்டுக் கொண்டு வந்தன.

நிதானத்தை இழந்து அத்திம்பேரிடம் வாதாடினேன். பெண்ணின் இஷ்டம் வேறு விதமாக இருக்கிறது என்பதனால் அவரும் என் கோரிக்கைக்கு இணங்கவில்லை. குடும்



சினிமா பார்ப்பவர்: (பக்கத்தில் ஓயாமல் பேசுபவரைப் பார்த்துக் கோபத்துடன்):—ஸார், மன்னிக்க வேண்டும். ஒரு வார்த்தை கூடக் காதில் விழவில்லை!

மற்றவர் (கோபத்துடன்):— என் மனைவியும் நானும் பேசிக்கொண்டிருப்பது உம்முடைய காதில் என்னத்துக்காக விழ வேண்டும்?

பத்தில் பிளவு ஏற்பட்டது. என் தாத்தா, பாட்டி, மற்ற சகோதரிகள் எல்லோருமே அவரிடம் விரோதம் பாராட்டினார்கள்.

கேவலம் விரோதத்தினால், பேச்சு வார்த்தைகள் இல்லாமற் போய்விட்ட நிலைமையினால் மாத்திரம் என் மனது சமாதானப்படவில்லை. ஆத்திரம் என் அறிவுக் கண்களை இறுகக் கட்டிவிட்டது. அந்தப் பெண்ணுக்கு வேறு இடத்தில் கல்யாணம் நடந்து விடுவதைப் பார்த்து விடலாமே என்ற கொடூர எண்ணம் நாக சர்ப்பம் போல என்னுள் சீறி விஷத்தைக் கக்கியது.

வேறு இடத்தில் அவளுக்குக் கலியாணம் நிச்சயமாகி இருந்தது. அந்த வரனுக்குக் கடிதமெழுதிக் கலியாணத்தை நிறுத்திவிட நினைத்தேன். ஆயினும் கலியாணம் நடைபெற்றே தீர்ந்தது. ஆயினும் அவள் வாழ்க்கை சூன்யமாகிவிடும் என்று நிச்சயமாகத் தெரியும். எந்தப் புது மாப்பிள்ளையும் என் கடிதத்தைப் படித்த பிறகு மன நிம்மதியில் மனைவியுடன் வாழ்ந்து விட முடியுமா?

இதிலெல்லாம் எனக்கு நிம்மதி ஏற்பட்டு விட்டதா? காலம் போகப் போக நான் கக்கிய விஷம் என்னையே திருப்பித் தாக்கிற்று. என் அத்திம்பேருக்கு மனக் கவலை அதிகரித்தது. மாப்பிள்ளைப் பையன் பெண்ணைத் திருப்பி வீட்டிற்கே அனுப்பிவிட்டான். எனக்கும் பிற்பாடு வேறு இடத்தில் விவாகமாகி விட்டது.

ஆயினும் நான் இழைத்த கொடுமையின் விளைவுகளுக்கு முதல் பலியாக என் மனைவி அமைந்தாள். அவள் இறந்ததும் எனக்கு ஞானோதயம் ஏற்பட்டது. மருமாளின் வாழ்க்கையை மண்ணாக்க முயன்றதன் விளைவு என்று என் மனம் என்னை இடித்துக் காட்டியது. அது முதல் என் மனத்துக்கு நிம்மதி இல்லை. அத்திம்பேரும் 'ரிடையர்' ஆகி வாழாவெட்டிப் பெண்ணுடன் இந்தக் காட்டுப்பட்டிக்கு வந்து குடியேறி விட்டார். என்றைக்காவது ஒருநாள் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கதற வேண்டும் என்று துடித்தது உள்ளம். அதற்கேற்றாற் போல, அவர் கொடூரமான மன நோயினால் பீடிக்கப்பட்டிருக்கிற செய்தியும் இரண்டு நாட்களுக்கு முன்புதான் கிடைத்தது. அதற்காகவேதான் ஓடோடியும் வந்தேன்.''

கதையை அவர் நிறுத்தி விட்டார். இவ்வளவு நேரமும் பொறுமையுடன் நான் எப்படிக் கேட்டுக் கொண்டிருந்தேன் என்பதை நினைக்க நினைக்க என் உள்ளம் படபடத்தது. குற்றமிழைத்து விட்டு மன்னிப்புக்காகத் தவம் கிடந்து பரிதாபமாக அலறும் அவருடைய தீனக்குரல் என் உள்ளத்தைத் தொட்டது. என் குரல் கரகரத்தது. கல்யாண சமயத்தில் வந்த மொட்டைக் கடிதமும், எதிரே அமர்ந்திருக்கும் மனிதரும், பாழ்பட்டுக் கிடந்த என் அவல வாழ்க்கையும் மாறி மாறி மாறி என் நினைவில் சுழன்றன.

ஜானகி குற்றமற்றவளா? அந்தப் பேதைப் பெண்ணைச் சரிவரப் புரிந்து கொள்ளக்கூடிய சக்தி இல்லாமல், நானல்லவா அவளுக்குத் துரோகம் செய்து விட்டேன்? மீண்டும் அவள் என்னை மன்னிப்பாளா?

சந்தேகப் பேய் என் மனத்தினின்றும் அகன்றது. என் அகக்கண்கள் திறந்து கொண்டன. ''மிஸ்டர்! நான்தான் ஜானகியின் கணவன் சேகரன். உங்கள் குற்றம் கட்டாயம் மன்னிக்கப்பட்டு விடும். உங்களுக்கு நானல்லவா நன்றி செலுத்த வேண்டும்? மொட்டைக் கடிதத்தை நம்பி ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் கெடுக்கத் துணிந்த நான் அல்லவா மகாபாவி!'' என்று உணர்ச்சிப் பெருக்கில் கதறியே விட்டேன்.

*

கீழ்வானம் வெளுத்தது. மழை நின்று விட்டது. தன் கடனைத் தீர்த்துவிட்ட வகையில் மேகங்கள் சர சர வென்று வேறு திசையில் பிரயாணம் செய்து கொண்டிருந்தன. பலத்த மழைக்குப் பிறகு ஏற்பட்ட அமைதியின் குதூகலம் எங்கும் பரவியது.

என் மாமனாருக்குத் தாம் காண்பது கனவோ என்று இருந்திருக்க வேண்டும். மைத்துனனும், மாப்பிள்ளையும் ஒருங்கே சேர்ந்து வந்து தங்கள் தவறை உணர்ந்து வருத்தப்படும் போது, அவரைப் பிடித்திருந்த மனநோய் தானாகவே அகல வேண்டியதுதானே?

ஜானகியைப் புதுக் கண்களால் பார்த்தேன். பரஸ்பரம் வறண்டு கிடந்த எங்கள் உள்ளங்களிலும் ஏக காலத்தில் அன்பு மழை சொரிந்தது.

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## துருக்கி

உலகத்திலே எத்தனையோ சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்திருக்கின்றன. ஆனால் துருக்கி சாம்ராஜ்யத்தைப் போல் சுமார் ஆறு நூற்றாண்டுகள் வரையில் நிலைத்து நின்று ஜய பேரிகை முழங்கிய சாம்ராஜ்யம் வேறு எதுவுமே இல்லை.

துருக்கியர்களின் பட்டாக்கத்தியைக் கண்டு ஒரு காலத்தில் ஐரோப்பா முழுதும் நடுங்கியது. தாங்கள் செய்த பாவங்களுக்குத் தங்களைத் தண்டிக்கவே ஆண்டவன் துருக்கியர்களைச் சிருஷ்டித்ததாகக் கிறிஸ்துவர்கள் கருதினார்களெனில், துருக்கியர்களின் பராக்கிரமத்தை ஊகித்துக் கொள்ளலாம்! துருக்கியர்கள் பல நாடுகளையும் வென்று ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா இம் மூன்று கண்டங்களிலும் தங்களுடைய சாம்ராஜ்யத்தை வியாபிக்கச் செய்தனர்.

அதே சமயத்தில் ஜார் சக்கரவர்த்தியின் கீழ் ருஷ்யர்களும் துருக்கிக்குப் போட்டியாகத் தங்களுடைய சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கப் பெரு முயற்சி செய்து வந்தனர்.

அதன் பலனாக அந்த இரு நாடுகளுக்கும் இரு நூறு வருஷகாலம் அடிக்கடி போர் நடந்தது. கடைசியாக ஜார் சக்கரவர்த்தியும் அழிந்தார்; துருக்கி சுல்தானும் மறைந்தார். இரண்டு சாம்ராஜ்யங்களும் தேய்ந்து மறைந்தன. அப்படியிருந்தும் மேற்படி இரண்டு நாடுகளுக்கும் அக்காலத்தில் மூண்ட பகை இன்று வரையில் மறையாமல் இருந்து வருவதுதான் விந்தையாகும். 1361-ல் பிறந்த துருக்கி சாம்ராஜ்யம் முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் நமது தலை முறையில்தான் மறைந்தது.

துருக்கியர்கள் போரில் புலிகளாக இருந்தார்கள்; கொடியவர்களாகவும் இருந்தார்கள். ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் தரை மார்க்கமாக இருந்த வர்த்தகப் போக்குவரத்துப் பாதைகள் துருக்கி சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டு விட்டதால், மேற்படி பாதைகளைத் துருக்கியர்கள் தடுக்கமுற்பட்டனர்.

துருக்கியின் அந்தச் செய்கைதான் வியாபாரப் போக்குவரத்துக்குக் கடல் மார்க்கத்தைக் கண்டு பிடிக்கும்படி ஐரோப்பியர்களைத் தூண்டியது. அதன் பயனாகவே, கொலம்பஸ் அமெரிக்காவையும் வாஸ்கோடி காமா இந்தியாவையும் கண்டு பிடித்தார்கள்!

*　　*　　*

துருக்கி சாம்ராஜ்யம் தேய்ந்து மறைந்ததற்கும், தரை மார்க்கமாக இருந்த வர்த்தகப் பாதைகளைத் துருக்கியர்கள் தடுத்தது ஒரு காரணம் எனலாம். அதனால் துருக்கி சாம்ராஜ்யத்தின் கீழ் இருந்த ஐரோப்பியப் பிரதேசங்களில் வியாபாரம் க்ஷீணித்து, செல்வம் குறையலாயிற்று.

தவிர மதப்போர்கள் நடந்த காலத்திலிருந்து கிறிஸ்துவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் தீராப் பகை இருந்து வந்ததால், ஐரோப்பிய நாடுகளில் துருக்கி சாம்ராஜ்யம் நிலை பெற முடியவில்லை. எனினும் இவ்வளவு இடையூறுகள் இருந்தும்கூட, துருக்கி சாம்ராஜ்யம் சுமார் அறுநூறு ஆண்டுகள் வரையில் மிகுந்த செல்வாக்குடன் இருந்ததுதான் ஆச்சரியமாகும்.

மேற்படி நாடுகளில் துருக்கியர்கள் கிறிஸ்துவச் சிறுவர்களை அடிமைகளாக்கி, பிறகு அவர்களை முஸ்லிம்களாக மாற்றும் வழக்கம் இருந்தது. அடிமைகளான கிறிஸ்துவப் பெண்களைச் சுல்தான்கள் கல்யாணம் செய்து கொண்டதாகவும் தெரிகிறது. அந்த அடிமைகளுக்குப் பிறந்தவர்கள் இந்தியா, எகிப்து முதலிய தேசங்களில் முஸ்லிம் மன்னர்களாகவும் இருந்திருக்கிறார்கள்!

துருக்கி சாம்ராஜ்யத்துக்கு இடை விடாமல் ருஷ்யாவின் எதிர்ப்பு இருந்து வந்ததுடன், அந்த சாம்ராஜ்யத்துக்கு உள்ளேயும் புரட்சிகள் ஏற்பட்டன. துருக்கி சாம்ராஜ்யத்தின் கீழ் இருந்த கிரீஸ், ருமேனியா, செர்பியா, பல்கேரியா முதலிய பால்கன் நாடுகள் அந்த சாம்ராஜ்யத்திலிருந்து பிய்த்துக் கொண்டு சுதந்திரமாக இருக்கத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தன.

1566-ம் வருஷத்தில் விளங்கிய மகத்தான துருக்கி சாம்ராஜ்யம்.






இன்றையத் துருக்கி

இங்கிலாந்து, பிரான்ஸ், ருஷ்யா இத் தேசங்களின் உதவியால் கிரீஸ் துருக்கி சாம்ராஜ்யத்திலிருந்து தனியாகப் பிரிந்து கொண்டது.

அந்த சாம்ராஜ்யத்தின் கீழ் இருந்த பால்கன் நாடுகள் விஷயத்தில் அனுதாபப் படுவது போல் ருஷ்யா காட்டிக் கொண்டது. ருஷ்யாவின் அந்தரங்கமான நோக்கம் என்னவெனில், துருக்கி சாம்ராஜ்யத்தின் பழைய தலை நகரான கான்ஸ்டாண்டிநோபிளைக் (இன்றைய இஸ்தான்புல்) கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்பதுதான்.

அதன் காரணமாக இரு நாடுகளுக்கும் 1730-ம் வருஷம் ஆரம்பமான போர் 1914-ம் ஆண்டு வரையில் அடிக்கடி நடந்து வந்தது! அதனால் நாளுக்கு நாள் ருஷ்ய சாம்ராஜ்யத்தின் விஸ்தீரணம் அதிகமாகி வந்தது. துருக்கி சாம்ராஜ்யத்தின் விஸ்தீரணம் குறையலாயிற்று.

• • •

பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரீஸ் நாடு சுதந்திரப் போரில் ஈடுபட்டது. அதைத் துருக்கியர்கள் எதிர்த்துப் போரிட்டு வருகையில், அதுதான் சரியான சமயம் என்று எண்ணி, கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்ற ருஷ்ய சக்கரவர்த்தி முயற்சித்தார். ஆனால் இங்கிலாந்தும், ஆஸ்திரியாவும் அதற்கு இடம் கொடுக்க வில்லை. இடம் கொடுத்திருந்தால் ருஷ்யா அக்கரைக் கடலிகரம் செய்வதில் வெற்றி பெற்றிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

துருக்கியிடம் உள்ள அன்பு காரணமாக இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும் ருஷ்யாவின் முயற்சிக்குத் தடையாக இருக்க வில்லை. தங்களுக்குப் போட்டியாக ருஷ்யா பலம் பெற்றுவிடக் கூடாதே என்பதுதான் அந்த நாடுகளின் கவலையாக இருந்தது.

பிரிட்டனுக்கும் ருஷ்யாவுக்கும் பல நூற்றாண்டுகளாகப் பரஸ்பரம் பகையும் போட்டியும் பொறாமையும் இருந்து வந்தன.

இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் ஏற்பட்ட பின் அந்தப் போட்டி அதிகமாயிற்று. தங்களுடைய இந்திய சாம்ராஜ்யத்துக்கு ருஷ்யாவினால் ஆபத்து ஏற்படக்கூடும் என்ற பெரும் திகில் பிரிட்டனை ஆட்கொண்டதே அதற்குக் காரணம்.

மத்தியதரைக் கடலின் முக்கியத் துறைமுகமான கான்ஸ்டாண்டிநோபிள் ருஷ்யாவின் கையில் சிக்கி விட்டால், அங்கு கடற் படையை வைத்துக் கொள்ள ருஷ்யாவுக்கு வசதி ஏற்பட்டு விடும் அல்லவா? அதனால்தான், துருக்கிக்கு ருஷ்யாவினால் ஆபத்து ஏற்படாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பைப் பிரிட்டன் ஏற்றுக் கொள்ள நேர்ந்தது.

ஆஸ்திரியாவுக்கும், ருஷ்யாவின் பலம் பெருகாமல் தடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏனெனில் அப்போது ஆஸ்திரியா ஒரு சிறிய நாடாகிவிட்டது. அதற்கு முன் ஒரு காலத்தில் ஆஸ்திரிய சாம்ராஜ்யம் பெரிதாக இருந்ததால், அந்த நாட்டுக்கு மீண்டும் சாம்ராஜ்ய ஆசை ஏற்படலாயிற்று. துருக்கி சிதறுண்ட பின் பால்கன் பிரதேசத்தில் பெரும் பகுதி தங்கள் பங்குக்குக் கிடைக்கலாம் என்று ஆஸ்திரியர்கள் கருதினர். எனவே, ருஷ்யா, இங்கிலாந்து, ஆஸ்திரியா எல்லாம் தத்தம் சுயநலத்தை முன்னிட்டு, துருக்கியின் நாசத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தன.

இச் சந்தர்ப்பத்தில், அதாவது 1853-ம் வருஷம் ஜார் சக்கரவர்த்தி பிரிட்டிஷ் ஸ்தானிகரிடம் கூறிய ஒரு விஷயம் சரித்திரப் பிரசித்தி பெற்றதை இங்கு குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

"நமது பொறுப்பில் ஒரு நோயாளி இருக்கிறான். அவன் எந்த க்ஷணத்திலும் இறக்கலாம். இறந்த பின் அவனை என்ன செய்வது? இதுதான் இன்று நம் முன் உள்ள பெரும் பிரச்னை" என்று ஜார் சக்கரவர்த்தி பிரிட்டிஷ் ஸ்தானிகரிடம் கூறினாராம். அதிலிருந்து தான் துருக்கிக்கு 'ஐரோப்பாவின் நோயாளி' என்ற பெயர் பிரசித்தமாயிற்று.

ஆனால் ஜார் சக்கரவர்த்தி எதிர்பார்த்த விதம் நோயாளி சீக்கிரத்தில் இறப்பதாகத் தோன்றவில்லை! எனவே அதே வருஷத்தில் அவர் மறுபடியும் துருக்கிமீது படையெடுத்தார். அந்தப் போர்தான் கிரிமியா யுத்தம் என்று வழங்கப்படுகிறது. அந்த யுத்தத்திலும் ருஷ்யா முன்னேற முடியாமல் இங்கிலாந்தும் பிரான்சும் தடுத்துவிட்டன.

# புதுக் குடித்தனம்

கமலபதி

கல்யாணம் முடிந்து நான்கு நாட்கள்தான் எங்கள் வீட்டில் இருந்தேன். அவரும் இருந்தார். அவருக்குப் பிரபலமான விருந்துகள் ஏற்பாடு செய்திருந்தோம். கல்யாணத்திற்கு வந்திருந்தவர்கள் எல்லோரும் போய் விட்டாலும், அவர் இருப்பதுமட்டும் எனக்கு ஆயிரம் பேர் பக்கபலமாக இருப்பது போலிருந்தது. யார் யாரோ வருகிறதும் அவரைப் பார்த்துவிட்டுப் போகிறதுமாக இருந்தார்கள். அந்த நான்கு நாட்களுமே இன்ப நாட்களின் வரிசையில் சேர்க்க வேண்டியவை. அந்த நான்கு நாட்களில் எத்தனையோ முறைகள் ஆவல் துடிக்க, சந்தடி செய்யாமல் அவரைக் காண முயற்சித்தேன். ஆனால் ஏதாவது காற்றுச் சப்தம் ஏற்பட்டால் கூடத் திடுக்கிட்டுத் திரும்பி விடுவேன். பாழும் நாணம் என்னை வந்து கவ்விக் கொள்ளும். பாவம்! அவர் ஏமாந்து விடுவார். கடைசியில் இந்த நான்கு நாட்களில் என் மேல் ஆத்திரப்பட்டு எனக்கு அவர் அளித்த பட்டம் 'சுத்தப் பட்டிக்காடு' என்பதுதான்.

ஐந்தாவது நாள் நல்ல நேரத்தில் அவர், மாமியார், நாத்தனார்—ரோகிணி அதாவது என் கணவருக்குக் கடைசி ஆறு வயதுத் தங்கை முதலியவருடன் கிளம்பினேன். என் மாமியாரும் எங்கம்மாவைப் போல்தான் ஒரு கர்நாடகப் பேர்வழி. இப்படி யிருக்கும்போது அந்த ரயில் பிரயாணத்தில் நான் எப்படி அவரோடு அளவளாவ முடியும்! நான் என் மனதில் ரயில் பிரயாணத்திற்காகப் போட்டு வைத்திருந்த திட்டங்களும் அப்படியே வீணாகிவிட்டன. பாவம்! அவரும் ஏதோ திட்டங்கள்தான் போட்டிருந்தார் என்பது பின்னால் தெரிந்தது! ரோகிணி! அந்தக் குறும்புப் பெண் மட்டும் என்னையும் அவரையும் வழியில் ஏதேதோ சளைக்காமல் பரிகாசம் செய்துகொண்டே வந்தாள். அதுதான் எங்களுக்கு ஒரு பொழுது போக்காக இருந்தது. நான் குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருந்தேன். ரோகிணி என்னை ஏதாவது பரிகாசம் செய்து சிரிக்க வைப்பாள். என் புன் சிரிப்பையும் அழகையும் அவர் ரசிப்பார். பெருமூச்சு விடுவார். பிறகு வெளியில் இயற்கைக் காட்சிகளை ரசிப்பதில் முனைவார். ஒருவிதமாக ரயில் பிரயாணத்தைக் கடந்தோம்.

ஊரின் தெருக்கோடியை வண்டி நெருங்கியது. 'ஜல்ஜல்' என்ற சதங்கைச் சத்தத்தைக் கேட்டுத் தெருவிலுள்ளவர்கள் எங்களைக் கவனிக்க ஆரம்பித்தார்கள். வீட்டு வாசலில் வண்டி நின்றதும், வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் வாசலுக்கு வந்து எங்களை எதிர் கொண்டழைத்தார்கள்.

முதலில் அவர் இறங்கினார். தலையில் தொங்கும் தஞ்சாவூர் குதம்பத்தின் கனம் தாங்காமல் என் பின்னல் முன்புறம் சரிந்துவிழ வண்டியிலிருந்து இறங்கினேன். வீட்டு வாசலில் இறங்கிவிட்டது கூட அவருக்கு நினைப்பு இல்லை. அவ்வளவு சுவாரஸ்யமாக என் பின்னலழகைப் பருகியவாறு நின்று கொண்டிருந்தார்.

நான் வெட்கம் நிறைந்த முகத்துடன் தலை குனிந்து படியேறியதும், என் பெரிய நாத்தனார் ராதை ஆரத்தித் தட்டை எடுத்து வந்தாள். மேலாக்கு அசையத் தட்டைச் சுற்றி வர்ண ஜலத்தைக் கிழக்கே கொட்டும்போது ஜலத்தில் ஐந்து விரல்களையும் தோய்த்து அவர் கன்னத்திலும் என் கன்னத்திலும் லேசாகத் தட்டினாள். "திருஷ்டி பட்டிருக்கும் என்று செய்தேன். வெங்கு!" என்று அவரைப் பார்த்துச் சொல்லி ஒரு புன்னகையுடன் உள்ளே போனாள். அவர் கன்னத்தில் பொன் முத்துக்கள்போல் வழியும் அந்தச் சிவப்புச் சாயத்தைக் கைக் குட்டையால் துடைத்துக் கொண்டே உள்ளே போனார். நானும் அடிமேல் அடி வைத்து அவரைத் தொடர்ந்தேன். விசு பலகையில் உட்கார்ந்திருந்த மாமனாருக்கு நமஸ்காரம் பண்ணினேன்.

சமையல் உள்ளில் பாயஸத்தில் முந்திரிப் பருப்புப் போட்டுக் கொண்டிருந்த பாட்டி பரபரப்போடு ஓடி வந்து, "வாடியம்மா, லக்ஷ்மி! உள்ளே உன் பெரிய மச்சினன் இருக்கிறான், போய் நமஸ்காரம் பண்ணு. அப்புறம் எனக்குப் பண்ணலாம்" என்று கட்டளை யிட்டாள்.

பாட்டியின் சொற்படி நமஸ்காரம் செய்து விட்டுச் சமையல் அறைப் பக்கம் வந்தேன். பாட்டி பொக்கை வாய்ச் சிரிப்புடன் என்னை நிமிர்ந்து பார்த்தாள். "வந்ததும் வராததுமாய்த் துணைப்புகிறேன் என்று நினைக்காதே. இந்த முன் கொசுவமும் கோணல் வகிடும் இங்கே உதவாது" என்றாள்.

எனக்கு என்னமோ போலிருந்தது. ஒன்றுமே புரியவில்லை. ஏதோ ஒரு தப்பைச் செய்து விட்டவள்போல், கதவண்டை நின்று கொண்டிருந்த என் மாமியாரைப் பார்த்தேன்.

"லக்ஷ்மி! இங்கே வா, அம்மா!" என்று பரிவோடு என்னை என் கணவர் அறைக்கு அழைத்துப்போனாள். அங்கே என் கணவர் உட்கார்ந்திருந்தார்,

"பாட்டிக்கு வயசாகிவிட்டது. அவள் ஏதாவது சொல்லிக்கொண்டே யிருப்பாள். அவள் இஷ்டப்படியே, கொஞ்ச நாள் இந்தக் கோண வகிடு வேண்டாம். மடிசார் புடவையும் கட்டிக் கொண்டு விடு" என்றாள் மாமியார்.

"என்னம்மா இது! இப்போ அவள் எந்தப் பெரிய பெருமாளுக்கு ஆராதனை பண்ணப் போகிறாள்! மடிசார் வைத்துக் கட்டிக் கொண்டு நடக்கக் கூடத் தெரியாமல் திண்டாடப் போகிறாள். அவ்வளவுதானே! ஏது, சுத்தக் கர்நாடகமாக இருக்கிறீர்களே!" என்றார் அவர்.

"என்னடா, வெங்கு! நீகூட இப்படிச் சொல்லுகிறாய்! அவள் என்ன, எப்போதும் இங்கேயா இருக்கப் போகிறாள்! இரண்டு மாசத்திற்குப் பிறகு பட்டணத்திலே உன் இஷ்டப்படி ராணி மாதிரியாக இருக்கப் போகிறாள். யாராவது அங்கே வந்து வலுக்கட்டாயப் படுத்தப் போகிறார்களா!"

"சரி சரி, உங்கள் இஷ்டம்போலவே நடக்கட்டும்" என்று சிரித்துக்கொண்டே அவர் எழுந்து போய் விட்டார்.

"அம்மா!" என்று தயங்கினேன் நான்.

"என்ன லக்ஷ்மி!" என்றாள் என் மாமியார்.

"மடிசார் புடவை எனக்குச் சரியாகக் கட்டிக் கொள்ளத் தெரியாது, அம்மா!" என்றேன்.

"போகட்டும், நான் சொல்லித் தருகிறேன்" என்று மாமியார் பரிவுடன் சொன்னாள்.

* * *

கூடத்தில் எல்லோரும் சாப்பிட உட்கார்ந்திருந்தார்கள். வீட்டுக்கு வந்திருக்கும் மாட்டுப் பெண்தான் முதன் முதல் பாயஸம் பரிமாற வேண்டுமென்ற சம்பிரதாயமாம். சாஸ்திரத்தைப் பார்க்காவிட்டால் கூட சம்பிரதாயத்திற்குத் தானே நாமெல்லோரும் அடிமையாகியிருக்கிறோம்! அழகாக கெட்டிக்கரை கட்டிய பெங்களூர் சந்தனக்கலர் பதினெட்டு முழப் பட்டுப் புடவை. அதை எனக்கு மடிசார் வைத்துக் கட்டி விட்டிருந்தாள் மாமியார். அது சரசரவென்ற ஓசையுடன் ஒரு கால் பக்கம் ஏறுவதும் ஒரு பக்கம் இறங்குவதும் எனக்கு வேதனையாக இருந்தது. அடிக்கடி மறைவாகப் போய் இழுத்து விட்டுக் கொண்டு வந்தேன்.

இந்த மடிசார் புடவைக்காகக் கணவரிடம் வசவு வாங்கிக் கொண்டு பாயஸம் பரிமாற வந்தேன். கொசுவம் ஒரு பக்கம் சரிந்து கொண்டு போகத் துக்கம் தொண்டையை அடைக்க, ஒவ்வொரு இலையாய்ப் பாயஸம் பரிமாறிக் கொண்டே வரும் போது, "மன்னி, காலின் கீழே தேள்! மன்னி, தேள்!" என்று கத்தினள் குறும்புக்காரி ரோகிணி. உடனே திடுக்கிட்டுத் திரும்பினேன். என் கொசுவம் சரிவது போலிருந்தது. என் கால்கள் நடுங்கின. மருண்டு போய்க் கை நடுங்கியது. பாயஸ பாத்திரம் வழுக்கிக் கொண்டு 'தடா' ரென்று கீழே விழுந்தது. பாயஸத் துளிகள் எல்லோருடைய இலைகளிலும் சிதறின. அந்தக் குறும்புக் குட்டி ரோகிணி சிரித்தாள். எனக்கு எப்படியிருக்கும்!



அவர் என்னை ஏறிட்டு எரித்து விடுவது போல் பார்த்தார். நான் பயந்து போய் அழுதுவிட்டேன். நடுங்கும் கைகளுடன் பாயஸ பாத்திரத்தை எடுத்துக் கொண்டு சமையலறைக்குள் நுழைந்தேன்.

"ஏண்டி பெண்ணே! உன் பிறந்தகத்திலே டான்ஸ் கின்ஸ் சொல்லிக் கொடுத்திருக்கிறாளா என்ன! பாயஸத்தோடு போகாமல் வெள்ளிக் கிண்ணத்தையும் நசுக்கி விட்டாயே. அடியே! உன் மாட்டுப் பெண் சமர்த்தைப் பார்த்தாயோ!" என்றாள் பாட்டி.

என் மனம் வேதனையில் படாத பாடு பட்டது. நான் ஒரு மூலையிலேயே நின்றுவிட்டேன். சாப்பாடு முடியும் வரை அந்தப் பக்கமே எட்டிப் பார்க்கவில்லை.

சாப்பிட்டுவிட்டு அவசர அவசரமாகக் கையை அலம்பிக் கொண்டு என்னிடம் வந்தாள் ரோகிணி. "மன்னி! தெரியாத்தனமாக உன்னைப் பயமுறுத்தி விட்டேன். ஆனாலும் நீ இப்படி பயப்படுவாய் என்று எனக்குத் தெரியாது. என்னை மன்னித்து விடு" என்றாள் பரிதாபமாக. நான் பேசாமல் இருந்தேன். மறுகணம் அவள் விசித்து விசித்து அழ ஆரம்பித்து விட்டாள். உடனே என் மனம் இளகி விட்டது. "அடி அசடே, இதற்காகவா அழுகிறாய்! உன் பேரில் எனக்குக் கோபமே இல்லையடி. கண்ணு, அழாதே" என்று என் புடவைத் தலைப்பால் ரோகிணியின் கண்ணீரைத் துடைத்துச் சமாதானப்படுத்தினேன்.

புது மாட்டுப் பெண் பாயஸக் கிண்ணத்தைக் கீழே போட்டு விட்டாள் என்று என்னைப் பற்றி அவர்கள் உறவினர்கள் எல்லோருக்கும் பிரமாதமாக விளம்பரமாகி விட்டது. என்னைப் பார்க்க வந்தவர்களுக்கு நான் நமஸ்காரம் பண்ணி எழுந்தவுடன், "ஏண்டியம்மா! பாயஸம் பரிமாறத் தெரியாதா உனக்கு!" என்ற கேள்வியைக் கேட்டார்கள். எனக்கு வெட்கம் நாக்கைப் பிடுங்கிக் கொள்வது போல் இருந்தது. மௌனமாக நான் என் தலையைக் கவிழ்த்துக் கொண்டேன்.

நான் புக்ககம் வந்து பத்து நாட்

களுக்கு மயல் ஆகிவிட்டது. ஆனால் ஒன்றுமே எனக்குப் பழக்கமானதாக இல்லை.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேலையும் எனக்குப் புதியதாகவே தோன்றியது. மனிதர்களுடைய குணங்களும் அப்படியே தோன்றியது! என் பிறந்தகத்துக் காரியங்களுக்கும் இதற்கும் எவ்வளவோ வித்தியாசம்! புக்ககத்தில் என் கடமை என்ன என்பதே எனக்குப் புரியவில்லை.

''அம்மா! காரம் பிடிக்குமோ இவர்களுக்கெல்லாம்!'' என்று கேட்டுக்கொண்டுதான் சமைப்பேன். தவறிப் பழைய பழக்கமே வந்துவிடும். ''இதென்ன சாம்பாரா, மிளகாய் ஜலமா!'' என்று சிரிக்க ஆரம்பித்து விடுவார்கள். அத்தனை பேருக்கும் என் மேல் பிரியம்தான். ஆனால் அவர்கள் பரிகாசந்தான் எனக்கு என்னமோ போலிருந்தது. அந்தப் பரிகாசத்தில் என் கணவரும் கலந்து கொண்டு என்னைப் பிழியப் பிழிய அழ வைத்து விடுவார்.

* * *

அன்று பௌர்ணமி. வேலை முடிந்தவுடன் ஒன்பது மணிக்கே நான் மேல் மாடிக்கு வந்து விட்டேன். மெருகிட்ட தங்கப் பாளம்போல் சந்திரன் பவனி வந்து கொண்டிருந்தான். வழக்கம்போல் அதைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தேன். நட்சத்திரங்களும் பரிகசிப்பதுபோல் என்னிடம் கண்ணைச் சிமிட்டின.

''அக்கூ! அக்கூ!'' என்று இரண்டு தரம் எதிரில் ஆற்றங் கரை மாந்தோப்புக் குயில் கத்தியது. ஜிலு ஜிலுவென்று மெல்லிய பூங்காற்று என்மேல் ரம்மியமாக வீசிற்று. பக்கத்தில் டீக்கடை ரேடியோ அலறிக் கொண்டிருந்தது.

மாடியிலிருந்து கீழே பார்த்தால் அவர் அறை நன்றாகத் தெரியும். சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அவர் ஆவலுடன் யார் வரவையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். என் வருகைக்காகத்தான் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். எனக்கும் அவரிடம் போக ஆவல்தான். ஆனால் அவர் பரிகாசத்தை நினைத்தால்தான்......

நான் குனிந்து அவர் அறையை நோக்கினேன். பெருமூச்சுடன் எழுந்திருந்து ஜன்னலுக்குப் பக்கத்தில் போய் நின்றார். மறு நிமிஷம் அவர் சமையலறைப் பக்கம் போவது தெரிந்தது.

''அம்மா, அவள் எங்கே!''

''எனக்குத் தெரியாதேடா!''

கட்டைச் சுவரை பிடித்துக்கொண்டு நின்றிருந்த என்னை அவர் பார்த்துவிட்டார். என் நீண்டு தொங்கிய தலைப் பின்னல்தான் அவர் கண்களில் முதலில் பட்டது. மாடிப் படிகளில் தடதடவென்று ஏறிவரும் சப்தம் கேட்கவே நான் ஓடிச் சுவர் மறைவில் ஒளிந்து கொண்டேன்.

''இந்தா! இந்த விளையாட்டெல்லாம் போதும். இங்கே தனியாய் என்ன பண்ணுகிறாய்!''

நான் தலையை நீட்டி வெளியே பார்த்தேன். அவர் முகம் ஏமாற்றத்தாலும் கோபத்தாலும் சிவந்திருந்தது. நான் பயந்தவாறே அவரை நெருங்கினேன்.

''ஏன் இப்படி ஆட்டம் காட்டுகிறாய்! ராணியின் வருகைக்காக நான் பன்னிரண்டு மணிவரையில் காத்துக் கிடக்க வேண்டுமோ!''

''இல்லை, இல்லை......நீங்கள் வந்து......''

''நான் வந்து உன்னை என்ன பண்ணினேனாம்!''

''வீட்டில் எல்லோரும் பரிகாசம் பண்ணுகிறார்கள்!''

''இந்த மொட்டை மாடி ஒன்றுதான் உன்னைப் பரிகாசம் பண்ணவில்லையாக்கும். அதனால்தான் இத்துடன் கொஞ்ச வந்திருக்கிறாயாக்கும்!''

என் கண்களில் ஜலம் ததும்பியது. நான் கீழே குனிந்து கொண்டேன்.

''அட அசடு! அதற்குள் கண்ணிலே ஜலம் வந்துவிட்டதே!'' என்று என் கண்களைத் துடைத்து விட்டார். ''போனால் போகிறது, கீழே வா'' என்று என் கையைப் பிடித்தார்.



"என்னை இனிமேல் ஒன்றும் சொல்ல மாட்டீர்களே!" என்று கேட்டேன் தயக்கத்துடன்.

"அடி பைத்தியமே! உன்னை நான் என்றைக்காவது, ஏதாவது சொல்லியிருக்கிறேனா!"

"புதுசாக மாட்டுப் பெண் வந்தால் இப்படித்தான் பரிகாசம் பண்ணுகிறதோ!"

"நீயும் பதிலுக்குப் பரிகாசம் பண்ணிவிடேன்."

நான் சிரித்துக் கொண்டே என் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டேன். அவருடைய இன்ப அணைப்பில் [illegible] சென்றேன்.

* * *

மறு தினத்திலிருந்து என் குரல் அந்த வீட்டில் அதிகமாகக் கேட்க ஆரம்பித்தது. எல்லோருக்கும் 'பளிச் பளிச்' சென்று பரிகாசமாகப் பதில் கூறி வந்தேன். சிரிப்பும் கொம்மாளமும் கலகலப்பும் அதிகமாகவே இருந்தது.

"ஏண்டி பெண்ணே! வந்த நாளாய் உன் குரல் கூடத் தெரியவில்லையே! எங்கேயிருந்தடி வந்தது இந்த விளையாட்டும் கூத்தும்!" என்றாள் பாட்டி.

நான் சிரித்துக் கொண்டே என் கணவரைப் பார்த்தேன். "அவள் இனிமேல் புது மாட்டுப் பெண் இல்லை. அவள் குடித்தனம் வந்து ஒம்பது வருஷத்திற்கு மேல் ஆகி விட்டது! இல்லையா, லக்ஷ்மி!" என்று என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கேட்டார்.

"நன்றாயிருக்கிறது உங்கள் கூத்து!" என்று கூறியவாறே பாட்டி தன் பல் இல்லாத வாயைத் திறந்து ஒரு பொக்கைவாய்ச் சிரிப்புச் சிரித்தாள்.

# என்ன சத்தம்?

சம்பந்தத்துக்கு வெகு நாட்களாகவே ஒரு கார் வாங்க வேண்டும் என்று ஆசை. தன்னைப் பார்க்க வந்த நண்பர்களையெல்லாம், 'மாரிஸ் மைனர் வாங்கலாமா? ஸ்டுடிபேக்கர் வாங்கலாமா? செவர்லெட் வாங்கலாமா?' என்று ஆலோசனை கேட்பான். அவர்கள் தங்கள் தங்களுக்குப் பிடித்த ஏதாவது ஒரு காரின் பெயரைச் சொல்லிப் போவார்கள்.

ஒரு நாள் அவனுடைய அத்தியந்த நண்பர் அநவரதம் பிள்ளை அரக்கோணத்திலிருந்து வந்திருந்தார். சம்பந்தம் அவரிடமும் ஆலோசனை கேட்டான்.

"எந்தக் கார் வேண்டுமானாலும் வாங்கலாம். எதுவும் வைத்துக் கொள்ளும் விதத்தில் தான் இருக்கிறது. அதற்கு டிரைவர்கள் ஒழுங்கானவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் ஏதாவது ஒன்றுக்கொன்று சாமான்களை மாற்றிக் காரைக் கெடுத்து விடக்கூடும். இதற்கெல்லாம் இடம் கொடாமல் டிரைவரைக் கவனித்துக் கொள்!" என்றார் அவர்.

சம்பந்தத்துக்கு மிகவும் பிடித்த வார்த்தை மைனர். ஆகவே, அவன் ஒரு நாள் புத்தம் புதிய மாரிஸ் மைனர் ஒன்றை வாங்கி விட்டான்.

அன்று மாலை ஆனந்தமாகக் கடற்கரைக்குப் போய் வரவேண்டும் என்று அவனுக்குத் தோன்றிற்று.

உடனே டிரைவரைக் கூப்பிட்டு வண்டியை எடுக்கச் சொன்னான்.

கொஞ்ச தூரம் சென்றதும் வண்டியில் 'கர் கர் கர்' என்று ஏதோ சத்தம் வந்தது. வண்டி புதிதா? ஆகவே, சம்பந்தம் அரண்டு போய், "டிரைவர்! என்ன அப்பா, சத்தம்?" என்று கேட்டான்.

டிரைவர், "ஒன்றுமில்லை, எஜமான்! 'கியர்' மாற்றுகிறேன். அதுதான் அந்தச் சத்தம்!" என்று பதில் அளித்தான்.

அதைக் கேட்டதுதான் தாமதம்; சம்பந்தத்துக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்து விட்டது. "என் நண்பர் சொன்னது சரிதான். 'இந்த டிரைவர் பசங்களையே நம்பாதே. நம் கண்களுக்கெதிரிலேயே ஒன்றுக்கொன்றை மாற்றிக் காரைக் கெடுத்து விடுவார்கள்' என்று சொன்னார். நான் வண்டியின் உட்கார்ந்திருக்கும் பொழுது என் கண்களுக்கெதிரிலேயே 'கியரை' மாற்றத் தொடங்கி விட்டாயே! உன்னை என்ன செய்தாலும் தகும். வா, வா, வீட்டுக்குப் போனதும் முதல் காரியமாக உன்னைக் கணக்கைத் தீர்த்து வேலையை விட்டு நீக்கி விடுகிறேன்!" என்று கடிந்தான். — அஜயம்



இன்ஸ்பெக்டர்:—இவன் உம்முடைய வீட்டில் திருடியதாகச் சொல்கிறீர்களே, இவனிடமிருந்து எடுத்திருக்கும் சாமான்களில் உங்களுடையது ஏதாவது இருக்கிறதா என்று பார்த்துச் சொல்லுங்கள்!

வீட்டுக்காரர்:—இந்தக் கைக்குட்டைதான் என்னுடையது மாதிரியிருக்கிறது!

இன்ஸ்பெக்டர்:- அதைக்கொண்டு மட்டும் குற்றம் சாட்ட முடியுமா? என்னிடம் கூடத்தான் அதேமாதிரி ஒரு கைக்குட்டை இருக்கிறது.

வீட்டுக்காரர்:—ஆமாம், ஸார்! அதே மாதிரி என்னிடம் இரண்டு காணாமற் போயிருக்கின்றன!



## 'கோலினாஸ்' புன்னகையில் வெற்றி நடனமாடுகிறது!

நுரைதான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

அதி சிக்கனமானதுங்கூட —ஏனெனில் அரைஅங்குல அளவே போதுமானது!



ஈரமில்லாத பிரஷில் உபயோகிப்பதே உத்தமம்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்.
பம்பாய் 1.
கிளைகள்: கல்கத்தா-மதராஸ்-டில்லி.

---



அமெரிக்கன் மாடல் ரோல் பிலிம் பாக்ஸ்

## காமிரா

திருஷ்டி உபகரணத்துடன் உயர்ந்த லென்ஸுகள் பொருத்தப்பட்ட, விலையில் மலிவான மேன்மையான காமிரா. புதிதாகக் கற்றுக் கொள்பவர்களும் எளிதாக உபயோகிக்கலாம். பிலிம் நெ. 120-ல் நீண்ட காலம் திருப்தி அளிக்கும் $2\frac{1}{4}'' \times 3\frac{1}{4}''$ சைஸ் போட்டோக்கள் எடுக்கலாம். திருப்திக்கு உத்தரவாதம். முழு விவரங்களடங்கிய குறிப்புகளுடன் விலை ரூ. 11-8-0, பாக்கிங், தபால் செலவு ரூ. 1-8-0 தனி. தோல் கேஸ் ரூ. 3. ஸ்டாக்கு சொல்பமே உள்ளதால் இன்றே V.P.P.யில் அனுப்ப ஆர்டர்செய்யவும்.

### வீட்டில் சினிமா (சித்திர இயந்திரம்)

நீங்கள் களைத்திருக்கும்பொழுது இந்த சின்ன யந்திரம் மூலமாக, வீட்டில் பலவித கலர் சித்திரங்களைப் பார்த்து, ஆனந்தத்தை அடையலாம். இதர செலவு யாதொன்றும் கிடையாது. சினிமா சித்திரங்களுடன் செட் விலை விலை ரூ. 5-0-0. வி.பி.பி. சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

கடிதங்கள் ஆங்கிலத்திலேயே எழுதப்படல் வேண்டும்

**BENGAL TRADERS.**
(CHK) P.O. 21, ALIGARH. U.P. (INDIA)

---

## உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நல்ல வழி



அமெரிக்கன் மாடல் பிஸ்டல், லைசென்ஸ் அவசியமில்லை. டிராமா, சர்க்கஸ், பணத்தைக் காப்பாற்றிக் கொள்ள, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இதற்கு மிஞ்சிய ஸ்நேகிதனில்லை. சுட்டபொழுது நிஜமான பிஸ்டல் மாதிரி பயங்கரமான சப்தம் உண்டாகி நெருப்பு ஜ்வாலைகள் வெளிவரும். விலை 8-8-0 போஸ்டேஜ் 1-8-0 தனி. தோல் பெட்டி 2-8-0. பிஸ்டலுடன் 25 குண்டுகள் இலவசம். தனியாக தோட்டாக்கள் வேண்டுமானால் 1 டஜன் 1-8-0.

## புது தினுசு அமெரிக்க ஸ்பிரிட் ஸ்டவ்



சிற்றுண்டி, தேனீர், வெந்நீர் முதலியவை தயாரித்துக் கொள்ள மிகவும் உபயோகமானது. இந்த ஸ்டவ்விற்கு கொஞ்சம் ஸ்பிரிட் செலவு, ஸ்டாக் கொஞ்சமே கைவசமிருக்கிறது. விலை ரூ. 4-8-0. வி. பி. பி. யில் அனுப்ப கட்டணம் தனி ரூ. 1-8-0.

ஆங்கிலத்திலேயே கடிதங்களை எழுதவும்:

**SANSAR TRADING CO. (SPK)**
Kanwariganj. ALIGARH. U. P. (India)






# இணையிலாத உயர்ந்த ரோல் பிலிம்

மின்னல் வேகத்துடன் பரிபூரணத் திருப்தியளிக்கும் வண்ணம் படங்களை அளிக்குமாறு நவீனக்ரே பேஸ் கோட்டட் அதிநுட்பமான உயர்தர க்ரெயின் பான்க்ரோமாடிக ரோல் பிலிம்.

**எல்லா பிரபல போட்டோகிராபிக் டீலர்களிடமும் கிடைக்கும்**

சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

**எல். வி. ஸெட் & கோ., லிட்., கல்கத்தா-12 : பம்பாய்-18 : மதராஸ்-2**

---

**இகம் அமைதி சுகம் அளிக்கிறது**



**'ஆஸ்ப்ரோ'**



3 வில்லைகள் அணா 1½.
30 வில்லைகள் அணா 15.

166 TAM.

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றி யிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

**விலை அணா எட்டு**

(தபால் செலவு தனி)

●

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

**விலை ரூ. 2-8-0**

(தபால் செலவு தனி)

●

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

**கீழ்ப்பாக்கம் :: சென்னை**

## தளர்ச்சி, உடல் பலஹீனம் ஆரோக்கியமின்மை ஆகியவைகளுக்கு




வியாதியால் வலுவிழந்து மெலிந்து, பலமின்றி யிருப்பவர்கள் மீண்டும் சக்தி பெற்று பலமடைய ஏன்ஜியர்ஸ் எமல்ஷன் (Angier's Emulsion) ஓர் மிகச் சிறந்த சாதன மென்பதை தெரிந்து கொள்வார்கள். வலுவூட்டுவதிலும் பசியூட்டுவதிலும் மற்றும் ஜீரண சக்தி யளிப்பதிலும் இதற்கு மிஞ்சியது வேறு ஒன்றுமில்லை.

எல்லா கெமிஸ்டுகளிடமும்
வியாபாரிகளிடமும் கிடைக்கும்

# ANGIER'S EMULSION



## சருமத்திலும் மண்டையிலும் தோன்றும் நோய்களை எவ்வளவு விரைவில்

# Zam-Buk

### ஹிதப்படுத்தி குணமாக்குகிறது பாருங்கள்!



ஜாம்-பக் சருமத்தைச் சுத்தப்படுத்தி ஆரோக்கியம் அடையச் செய்கிறது.

ஜாம்-பக் மூலிகை ஆயின்ட்மெண்ட் சிறந்த ஔஷதங்களும், பிணியைத் தடுக்கும் தைலங்களும் கொண்டது. நோயுற்ற பாகத்தில் மயிர்க்கால்களுக்குள் இறங்கி வேலை செய்கிறது. புண்ணையும் எரிச்சலையும் போக்கி ஜாம்-பக் ஹிதம் தருகிறது. பிணியை உண்டாக்கும் தொத்து நோய்க் கிருமிகளை ஜாம்-பக் நாசம் செய்கிறது. ஜாம்-பக் எரிச்சலை அகற்றுகிறது. பிணியைப் பரவச் செய்யும் அழுக்குக் கழிவுகளைத் தடுக்கிறது. ஜாம்-பக் சருமத்தைச் சுத்தப்படுத்தி குணப்படுத்துகிறது. பார்வைக்கு மழமழப்பாகவும் வனப்பாகவும் தோன்றச்செய்து மீண்டும் ஆரோக்கியத்தை அளிக்கிறது. சரும நோய்கள், காயங்கள், வெட்டுக் காயங்கள், புண்கள், ரணங்கள், நெருப்புக் காயங்கள், மண்டைச் சொறி, பூச்சிக் கடி, நமைச்சல், மூலம், சேற்றுப் புண் முதலிய சரும வியாதிகளுக்கு உலகம் முழுவதும் ஜாம்-பக் உபயோகிக்கப்படுகிறது.




மிருக கொழுப்பு கலப்பற்றது என உத்தரவாதம்.

ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயின்ட்மெண்ட்

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

FZY: 1

# கோவிந்தன் கிப்ஸ் உபயோகிக்கிறான்—

அவன் பற்கள் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன.





கோவிந்தன் கிப்ஸ் டென்டி பிரிஸை விரும்புகிறான். அவன் சிறு வயதிலிருந்தே அதை உபயோகித்து வருகிறான்.



காலையிலும் மாலையிலும் எல்லா பற்களையும் கிப்ஸ் டென்டி பிரிஸினால் தேய்க்கிறான். மேலும்கீழுமாக —ஒரு பக்கமிருந்து மறுபக்கமாக அல்ல.



அவன் பற்கள் பிரகாசமாகவும் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அது கிப்ஸ் டென்டி பிரிஸினால்தான்!

## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புதுமணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

லிஸோ சோறபம்—பலநாட்கள் நீடித்துவரும்

CD. 27-479 TM

# ஆயுட் காலத்துக்கு

# பென்ஷன்

நீங்கள் பென்ஷன் பெறமுடியாத உத்தியோகத்திலோ, வியாபாரத்திலோ, தொழிலிலோ இருக்கிறீர்களா? நீங்கள் கூட இந்த சுலபமான 'சுயஉதவி' முதலீடு திட்டத்தின் பிரகாரம் உங்கள் ஆயுட்காலத்திற்குப் பென்ஷன் பெறமுடியும்.

இப்போதே தொடங்குங்கள். அடுத்த 12 வருடங்களுக்கு மாதாமாதம் விடாமல் ஒரு பன்னிரண்டு வருஷ நேஷனல் ஸேவிங்ஸ் ஸர்டிபிகேட் விதம் வாங்குங்கள். தொகை ரூ. 150 என்று வைத்துக்கொள்வோம். இந்த ஸர்டிபிகேட்டுகள் 1963 முதல் ஒவ்வொரு மாதத்திலும் காலாவதியாகி வரும். மாதம் ஒரு ஸர்டிபிகேட் விதம் மாத்திரம் ரூ. 75 போனஸ் பெறுங்கள். அசல் தொகை ரூ. 150ஐ திரும்ப முதலீடு செய்து விடுங்கள். இப்படியாக 1963 முதல், உங்களுக்கு மாதாமாதம் ஒழுங்காக ரூ. 75 வருமானம் கிடைக்கும்.

இதனுடன் அசல் தொகையின் மொத்தம் ரூபாய் 21,600 உங்கள் வாரிசுதாரர்களுக்கும் வைக்கலாம். இன்றே ஆரம்பித்து மாதம் ஒரு ஸர்டிபிகேட் விதம் அடுத்த பன்னிரண்டு ஆண்டுகளுக்கு வாங்குங்கள்.

**நேஷனல்
ஸேவிங்ஸ்
ஸர்டிபிகேட்டுகள்**

எதிர்கால நலனை உத்தேசித்துப்
பார்ப்பவர்களுக்குப் பாதுகாப்பு.

இந்தியா நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர் ஆபீஸ், நிதிமந்திரி காரியாலயம்,
காட்டன் காஸில், ஸிம்லா

AC 292 TM

# டயபெப்ஸின்




ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ் பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்த்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப் பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் தக்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.

**யூனியன் டிரக், கல்கத்தா**

ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்
மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**UNION DRUG. CALCUTTA**



எழில் வாய்ந்த
கொண்டைகளையும்
பெருகும் கூந்தலையும்
**கேசவர்த்தினியின்**

உதவியால்
அடையுங்கள்

கேசவர்த்தினி அணா 14: சாம்பு அணா 14: தபால் செலவு வேறு: எங்கும் கிடைக்கும்.
தென் இந்திய ரஸாயனசாலை, கோயமுத்தூர்.






நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தினசரி போஜனத்திற்குப் பிறகு ருசிகரமான வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் சாப்பிட்டு வந்தால் சொற்பகாலத்திலேயே தெம்பும் திடமும் அதிகரிப்பதை காண்பீர்கள். தேக உறுப்புகளுக்கு வலுவூட்ட அவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் உங்களுடம்பில் திராணி அதிகரிக்கச் செய்யும். களைப்பேற்படாமல் தெம்பூட்டி ஜலதோஷம், இருமல் வராமலிருக்க அதிக எதிர்ப்பு சக்தியும் பெற உதவுகிறது. இளையோர், முதியோர் யாவருக்கும் சிறந்த ஆரோக்கிய டானிக்.




# WATERBURY'S
## COMPOUND

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தெம்புடன் வைத்திருக்கும்

NAS 737

அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*"Of all the toilet creams that I have used, I unhesitatingly prefer Oatine Cream as being the pleasantest and most satisfactory for improving the complexion."*

Kanan Devi

# OATINE

SNOW AND CREAM

Make sure seal




is unbroken

# கரப்பைக் கொல்லுங்கள்

## —அது உங்கள் உணவை அசுத்த மாக்கி, வியாதியைப் பரப்புகிறது



கரப்பு ஒரு தடவைக்கு 16 முட்டைகள் இடுகின்றது. முட்டை கிளம்பியதிலிருந்து பூரண வளர்ச்சி பெற சுமார் ஒரு வருஷமாகும். அதற்கிடையில் அதன் சருமம் ஆறு தடவை உரித்துவிழுகிறது.

கரப்பு பகலெல்லாம் ஒளிந்திருந்து இரவில் வெளி வருகிறது. உங்கள் உணவு, துணிகள், காகிதம், புத்தகங்கள் மற்றும் கண்ணில் கண்ட சாமான்களையெல்லாம் கடித்து அசுத்தமாக்குகிறது. சாக்கடைகள், கக்கூஸ்கள் முதலிய அசுத்தமான இடங்களில் வாழும் இந்த ஜந்து வயிற்றுப்போக்கு, வயிற்றுக் கடுப்பு மற்றும் அநேக நோய்களைப் பரப்புகிறது.

ஞாபகமிருக்கட்டும்: ப்ளிட்டிலடங்கிய 5 கொடிய டோஸின்கள் கரப்புகளையும் மற்ற எல்லாப் பூச்சிகளையும் துரிதமாயும் நிச்சயமாயும் கொல்லுகின்றன.

கரப்பு உங்கள் உணவை அசுத்தமாக்குமுன் அதைக் கொல்லுங்கள்.

# ப்ளிட்

அதிக கரப்புகளைக் கொல்கிறது—
அதற்குச் செலவழிக்கும் காசு
வீண்போகிறதில்லை

ஸ்டாண்டார்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

மீண்டும் பாதி விலைக்கு குறைவான சலுகை!
15 நாட்களுக்கு மட்டும்
புகழ் வாய்ந்த ஸ்விஸ் பாக்டரியில் தயாரித்த கைக் கெடிகாரங்கள்.

ஒவ்வொன்றும் ஐந்து வருட உத்திரவாதம் கொண்டவை.



| | ஒரிஜனல் விலை | தற்போது விலை |
|---|---|---|
| ஜெர்மன் பாக்கெட் வாட்ச் | 24/- | 11/- |
| ,, உயர் ரகம் | 28/- | 13/- |
| இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் | 40/- | 19/- |

No. 525 Size 6¾'''



| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 96/- | 45/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 100/- | 48/- |

No. 526 Size 10½'''



| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 98/- | 48/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 110/- | 52/- |

No. 527 Size 5¼'''



பிராஜ் ஷேப்

| | | |
|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் கேஸ் | 45/- | 22/- |
| 5 ஜுவல் ரோல்டு கோல்டு | 52/- | 25/- |

இரண்டு கடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு தபால் செலவு இலவசம்.

**PIONEER WATCH Co**
POST BOX NO 11428 CALCUTTA

அறிமுகப் படுத்துகிறோம்.....

# மைசூர் சோப்

## தனிக் கட்டிகள்

**சிறந்த சலவை சோப்**

★

கலப்படமற்றது, ஹானியளிக்கும் மூலப் பொருள்களின் சேர்க்கையற்றது. மிகவும் பரிசுத்தமானது.

**கஷ்டமில்லாமல் துணிகளை வெளுக்கிறது**

நேரம், சிரமம், பணம், வேலை சகலத்தையும் மிச்சப் படுத்தி உங்களுக்குப் பரிபூரணத் திருப்தியை அளிக்கின்றது.

இன்றே ஒரு கட்டியை வாங்கிப் பாருங்கள்.

★

கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி
பெங்களூர்

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*



அதிக
மலர்ச்சியைத்தருவது . . .
ஹிமாலயா
புக்கே
டாய்லட், டால்கம் பௌடர்களின்
இனிமையான பரிமளம்




உங்கள் அழகு பராமரிப்புக்கு வாசனை யுடைய ஹிமாலயா புக்கே பௌடர் கள் மிகவும் சிறந்தவை. அவை பட்டு போல் மிருதுவாக இருக்கின்றன. உங்கள் சருமத்திற்கு சாந்தியை அளிக்கின்றன. அவைகளின் நீடித்திருக்கும் வெகு நேர்த்தி யான பரிமளம் உங்களை மலர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

நேர்த்தியான
இரண்டு இராஸ்மிக் தயாரிப்புகள்

HBP. 4-X30 TM

இராஸ்மிக் கம். லிட். [illegible] இந்தியாவில் தயாரித்தவை